# செந்தமிழ்ச் செல்வி





கழக ஆட்சியர்

தாமரைத் திரு, செந்தமிழ்ச் செல்வர், பேரவைச் செம்மல்

# வ. சுப்பையா பிள்ளை
# நினைவு மலர்

ம்பு-ருகூ] வள்ளுவர் ஆண்டு உ0கச, தை, FEB'83 [பரல்-சூ

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பிஎச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

உ. முனைவர் தமிழண்ணல், பேராசிரியர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

ங. பேராசிரியர் ச அகத்தியலிங்கம், தமிழ்த்துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம். அண்ணாமலை நகர்.

ச. முனைவர் பொன் சௌரிராசன், தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

ரு. முனைவர் பொன் கோதண்டராமன், உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.

சா. முனைவர் கு பரமசிவம், எம். ஏ.. பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர் அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

எ. பேராசிரியர் கு சுந்தரமூர்த்தி. எம். ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

அ. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ.,டிப்.லிங்., பிஎச்.டி.,
மயிலாடுதுறை.

கூ. கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

க0. பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம், தமிழியல்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

---

## உள்ளுறை

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௪, தை<br>பிப்ரவரி 1983 | பரல் ௬ |
|---|---|---|


## தமிழறிவின் பேரிமயம் சாய்ந்தது

தமிழ்மொழியும், தமிழ்நாடும், தமிழ் இனமும் உள்ளவரை 'உள்ளவராய்' வாழும் பெருமையைத் தம்மோடு சேர்த்துக்கொண்ட பெருந்தகை **தாமரைத்திரு, செந்தமிழ்ச் செல்வர், பேரவைச் செம்மல் வ. சுப்பையா பிள்ளை** ஆவர். 'முப்போதும் தமிழுக்கே உழைக்கத் தக்க பெருநல்லான் தமிழ்ப் புலவன் சுப்பையன்' என்று பாவேந்தர் பாரதிதாசன் பாடியது போன்று எப்போதும் தமிழுக்கு உழைத்தவர் அவர். கழகம் இல்லையேல் தமிழ் இல்லை என்று கூறு மளவிற்குத் தரமான தமிழ்நூல்களை நூற்றுக்கணக்கில் உருவாக்கிய பெருந்தகை அவர்.

தமிழ் ஆய்வாளர்க்கு அருங்கருவூலமான 'மறைமலையடிகள் நூல்நிலையத்தை' அவர் தோற்றுவித்தார். வீதிகள் தோறும் தமிழ் மணக்க இலக்கிய மாநாடுகளை அவர் கூட்டுவித்தார். மறைத்திரு மறைமலையடிகளாரின் மாண்புமிகு மாணுக்கராய் நின்று தனித்தமிழ் உணர்வைச் 'செந்தமிழ்ச் செல்வி'யின் வாயிலாக அவர் ஊட்டுவித்தார். தமிழன் என்ற உணர்வு ஒவ்வொரு தமிழனிடமும் இருக்க வேண்டுமென்பதற்காக 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' வரவேண்டுமென்று அவர் பாடுபட்டார்.

தமிழ்நூல் பதிப்புத்துறையில் தன்னிகரற்று விளங்கும் திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தம் தமையனுரும், மறைத்திரு. மறைமலையடிகளாரின் மருகருமாய திருவரங்கனருடன் இணைந்து நிறுவி ஏறத்தாழ 1750 அரிய நூல்களைத் தாமே ஆய்ந்தாய்ந்து வெளியிட்டுத் 'தமிழ் நூல் பதிப்புத் துறையின் இமயம்' எனத் திகழ்ந்தவர் அவர்.

திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சீமையில் வாழும் சைவ வேளாளர் மரபின் இரு கண்களாகத் திகழ்ந்தவர்கள் இருவர். வீரக்கண்ணாகத் திகழ்ந்தவர் வ. உ. சிதம்பரம் பிள்ளை. ஞானக் கண்ணாகத் திகழ்ந்தவர் வ. சுப்பையா பிள்ளை. நெல்லை நகரின் ஒரு பகுதியான பாளையங்கோட்டையில் வயிரமுத்துப் பிள்ளை — சுந்தரத்தம்மை இணைந்து நடத்திய ஏற்றமிகு இல்லறத்தின் பயனாய்த் தோன்றிய நன்மக்களில் நான்காமவராகத் தோன்றியவர் கழக ஆட்சியர். பிறந்த நாள் : 22 செப். 1897.

மூன்று வயதில் தந்தையையும் இருபத்தைந்து அகவைக்குள் இரண்டு தமையனாரையும் ஒரே தங்கையையும் இழந்த வ. சு. அவர்களைத் தாயார் சுந்தரத்தம்மையாரும் தந்தையார் பொறுப்பில் நின்று தமையனார் திருவரங்கனாரும் வளர்த்தனர். 1916இல் பள்ளியிறுதித் தேர்வையும் 1917இல் இலண்டன் மெட்ரிக் தேர்வையும் வெற்றியுடன் கடந்த அவர்க்கு மருத்துவக் கல்லூரியில் நுழையும் ஆர்வமேற்பட்டது. உடல் நோய் தீர்க்கும் மருத்துவராக வர இருந்த அவர் இடம் கிடைக்காததால் உள நோய் தீர்க்கும் மருத்துவராக, மனக்கோட்டம் தீர்க்கும் நூல் வெளியீட்டாளராக மாறினார். 1917இல் திருவரங்கனாரைக் காணக் கொழும்புவிற்குச் சென்றிருந்த வ. சு. அங்கு வருகை தந்த மறைமலையடிகளாரைக் கண்டு பழகினார். தமிழ் இருவரையும் இணைத்தது.

அடிகளார் நூல்களைப் பரப்பவேண்டுமென்று அவற்றை வாங்கி விற்று வந்த திருவரங்கனார் எல்லா நூல்களையும் வாங்கி விற்பதற்காகவே 'திரு சங்கர்' நிறுவனத்தைத் தொடங்கினார். அதுவே பின்னர்க் கூட்டுப் பங்கு நிறுவனமாக, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமாக, உருவாகியது. 1920 இல் கழகம் தொடங்கப்பெற்றபோது திருவரங்கனார் நெல்லையில் தலைமை நிலையத்தையும் வ. சு. பிள்ளை 1921 முதல் சென்னையில் கிளை நிலையத்தையும் பொறுப்புடன் நடத்தத் தொடங்கினர். இவ்வாறு கூட்டுப் பங்கு நிறுவனமாக உருவாவதற்கு வழிகாட்டியவர் திரு. டி. எஸ். விசுவநாத பிள்ளை அவர்கள். திரு. எம். திரவியம் பிள்ளை திருவரங்கனாருடன் இணைந்து கழகத்தை உருவாக்கினார்.

சைவத்திற்கும் தமிழுக்கும் உழைக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் தொடங்கப்பெற்ற கழகம் தமிழ் இலக்கிய, சமய நூல்களை அழகுற, செம்மையான முறையில் பதிப்பிக்கத் தொடங்கியது. கழகம் தொடங்கப்பெற்ற போதே வணிக நோக்குடன் மட்டுமே செயல்படவில்லை. பங்குதாரர்கட்கு 6 விழுக்காட்டிற்கு மேல் ஊதிய வீதம் கொடுப்பதில்லை என்று முதலிலேயே முடிவு செய்தது. இன்றும் இம்முறையே பின்பற்றப்பெறுகின்றது.

அடுத்து, கழகத்திலிருந்து கிடைக்கப்பெறும் ஊதியத்தில் சரிபாதி அறத்திற்கென ஒதுக்கி வைப்பதென முடிவாயிற்று. அதிலிருந்து தமிழுக்குப் பாடுபடத் தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தையும் சைவத்திற்குத் தொண்டாற்றச் சைவசித்தாந்த சங்கத்தையும் கழகம் தொடக்கத்திலிருந்து நடத்தி வருகிறது. தமிழ்ச்சங்கத்தின் சார்பில்தான் இலக்கிய மாநாடுகள் கூட்டப்பெற்றன. பல்லாவரத்தில் மறைமலையடிகள் கலைமன்றமும் பிற அற நிலையங்களும் இதன்வழி இயங்குகின்றன. சைவசித்தாந்த சங்கத்தின் சார்பில்தான் தமிழ் ஆய்வாளர்கட்குப் பழமரமாக, கற்பகத் தருவாகத் திகழும் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையமும் பிற அறநிலையங்களும் செயல்படுகின்றன. இவையனைத்தும் கழகம் வணிக நோக்கம் மட்டுமே கொண்ட நிறுவனம் அன்று என்பதை உணர்த்தி நிற்கின்றன. இத்தகைய நோக்குடன் தமிழ்நாட்டில் மட்டுமன்று, எந்த நாட்டிலும் வேறு எந்த நூல் வெளியீட்டகமும் பணியாற்றுவதாகத் தெரியவில்லை.

மறைமலையடிகளார் வழிநின்று தனித்தமிழ்க் கொள்கையைப் பரப்பவும், தமிழ், சைவம்பற்றி ஆய்வுரைகளை வெளியிடவும் 1923இல் 'செந்தமிழ்ச் செல்வி' எனும் திங்களிதழைக் கழகம் தொடங்கியது. இதுநாள் வரை இவ்விதழ் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகின்றது.

திருவரங்கனார் நெல்லையிலும் வ. சு. பிள்ளை சென்னையிலும் இருந்துகொண்டு 1920 முதல் 1944 வரை கால் நூற்றாண்டுக் காலம் மிக அரிய பதிப்புப் பணியைச் செய்தனர். எழுத்தாற்றலும் பதிப்பாற்றலும் பெற்றிருந்த அறிஞர்களையெல்லாம் தூண்டுதல் செய்து ஊக்கப்படுத்திப் பழந்தமிழ் இலக்கண, இலக்கிய, சமய நூல்களுக்கு உரை கண்டு அவற்றைச் செம்மையாகப் பதிப்பித்தனர். 'கழகப் பதிப்பு' என்றாலே தரமான பதிப்பு, தனிச் சிறப்புடைய பதிப்பு என்ற பெயர் பெற்று நிலைக்கலாயிற்று. தனியார் வெளியிட்டு, விற்பனையாகாது முடங்கிக் கிடந்த அரிய தமிழ்நூல்கள் பலவற்றை, இவ்விருவரும் அவ்வவர்தம் வீடுகளை நாடிச் சென்று, பெற்றுவந்து, அவற்றை விற்றுக் கொடுத்தது பெருஞ்செயலாகும். இவ்வகையில் கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனார் நூல்களை நிரம்ப விற்றுக் கொடுத்தமை குறிப்பிடத்தக்கதாகும். வண்டி வசதிகள் இல்லாத அக்காலச் சென்னையில் ஏறத்தாழ, கால் நூற்றாண்டுக் காலம் வ. சு. பிள்ளை ஈருருளை வண்டியில் தாமே நேரில் சென்று புத்தகங்களை வாங்கி விற்று வந்தார். திருவரங்கனார் மறைமலையடிகளாரின் மகளாய நீலாம்பிகை அம்மையாரை 1927 இல் திருமணம் செய்துகொண்டார். பாளையங்கோட்டை ஆண்டியப்ப பிள்ளை

யின் மகள் மங்கையர்க்கரசி அம்மையாரை வ. சு. பிள்ளை மண முடித்தார். இருவர்தம் இல்லறமும் நன்மக்கள் பேற்றுடன் சிறப்புற்றிருந்த காலை 1944இல் 'கழகத்தின் தந்தை'யெனத் திகழ்ந்த திருவரங்கனார் மறைவுற்றார். அடுத்த ஆண்டிலேயே அவர்தம் துணைவியாரான நீலாம்பிகையாரும் மறைந்தார். அடி மேலடி விழுந்ததுபோல் தமையனாரையும் அண்ணியாரையும் இழந்த பிள்ளையவர்கள் அண்ணனார் தொடங்கிய நிறுவனத்தைக் காப்பதா அல்லது அவர் விட்டுச்சென்ற மக்கட் செல்வங்களைக் காப்பதா என்று அலமந்து போயினர். எல்லாப் பொறுப்புகளும் அவர் தோள்களில் விழ இரண்டையும் திறம்பட ஏற்று நடத்தலானார்.

1945இல் கழக ஆட்சியர் பொறுப்பை திரு. வ. சு. ஏற்றுக் கொண்டார். தம் தமையனாரின் மக்கட் செல்வங்களைக் கவனிக்கவும் தம் வயது முதிர்ந்த தாயாரைப் பார்த்துக்கொள்ளவும் அவர் தம் துணைவியாரையும் இரு பெண்மக்களையும் நெல்லைக்கு அனுப்பி வைத்தார். அதுமுதல் எட்டாண்டுகள் சென்னையில் தாமே தனியாக இருந்துகொண்டே கழகப் பொறுப்பையும் குடும்பப் பொறுப்பையும் ஒன்றாகப் பார்த்து வந்தார். இத்துணை இன்னல்களிடையே கழகப் பணிகளனைத்தும் யாதோர் இடையூறுமின்றிச் செம்மையாக நடந்து வந்தன.

கழக நூல்களை அச்சிடுவதற்குச் சொந்தத்தில் அச்சகம் வேண்டுமென எண்ணி, 1948இல் 'அப்பர் அச்சக'த்தைத்தொடங்கினார். அந்நாள் தமிழக முதல்வர் ஓமந்தூர் இராமசாமிரெட்டியார் அச்சகத்தைத் தொடங்கி வைத்தார். கழக நூல்களைக் கண் கவரும் வகையில் அட்டைக்கட்டு, கலிக்காக்கட்டு, 'ரெக்சைன்' கட்டு என்று பல்வேறு வகையான கட்டுகளும் அமைய உருவாக்கினார். அதற்காகப் பின்னர் இந்திய அரசின் பரிசுகளையும் அனைத்திந்திய அச்சக உரிமையாளர் சங்கத்தின் பரிசுகளையும் கழகம் பெற்றது. ஆங்கில நூல்களுக்கு இணையாகத் தமிழ் நூல்களை வெளியிட்ட பெருமை வ. சு. பிள்ளை அவர்களையே சாரும்.

நூல் வெளியீட்டுப் பணியிலும் அவர் தயங்கவில்லை. சங்க இலக்கிய நூல்கள் அனைத்தும் ஓரிடத்தில் ஒருசேரக் கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பெரும் புலவர்களான நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், உரைவேந்தர் ஔவை. துரைசாமிப் பிள்ளை, பெருமழைப்புலவர் சோமசுந்தரனார் போன்றோரைக் கொண்டு உரை எழுதுவித்து அவற்றைப் பதிப்பித்தார். ஐம்பெருங் காப்பிய உரைகள் அத்தனையையும் இதுவரை ஒருசேரக் கழகம் தவிர வேறு யாரும் வெளியிட்டதில்லை என்று கூறுமளவிற்கு

அழகுறப் பதிப்பித்தார். ஐம்பெரு, ஐஞ்சிறு காப்பியங்கள், பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்கள், புராணங்கள், நீதி நூல்கள், உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றி லக்கிய நூல்கள், நன்னூல், யாப்பு முதலான இலக்கண நூல்கள், அகராதிகள், பழமொழிகள் போன்று தமிழுக்கு அடிப்படையாகத் தேவையான நூல்கள் அனைத்தையுமே அவர் வெளியிட்டார். இவற்றைக் கொண்ட 'இலக்கியப் பேழை'களையும் அவர் உருவாக்கினார்.

தமிழ்நூல் விற்பனையுலகில் பெரும் புரட்சியைச் செய்யும் வகையில் இதுவரை பத்து நூறாயிரம் படிகள் தமிழில் வேறு எந்த நூலும் விற்பனையாகவில்லை என்று கூறுமளவிற்குத் 'திருக்குறள் தெளிவுரை'யை முனைவர் மு. வரதராசனார் அவர்களைக் கொண்டு எழுதுவித்து விற்பனை செய்து அவர் வரலாறு படைத்தார்.

'இளமையிற் கல்' என்பதற்கேற்பச் சிறுவயதிலேயே தமிழை நன்றாகப் படித்தால் சிறுவர்கள் தமிழறிவு மிக்கவர்களாக விளங்குவார்கள் என்ற உறுதியான எண்ணத்துடன் வ. சு. பிள்ளை 'பிழையின்றிப் பேசுக' 'விளையாட்டுப் பந்தயம்' போன்ற சிறு நூல்களைத் தாமே படைத்தார். அவ்வாறே சிறுவர்க்கேற்ற நூல்களை வண்ண வண்ண ஓவியங்களுடன் காழி சிவ கண்ணு சாமிப்பிள்ளை, கா. அப்பாத்துரையார். என். கே. வேலன், சு. அ. இராமசாமிப்புலவர் போன்றோரைக் கொண்டு நூற்றுக்கணக்கில் உருவாக்கிக் 'கழகம்' வெளியிட்டுள்ளது போல் வேறு எந்த நிறுவனமும் சிறுவர் நூல்களை வெளியிட்டதில்லை என்று கூறு மளவிற்கு அத் துறையில் கழகம் சிறந்து விளங்க அவர் செய் துள்ளார். சிறுவர்க்காகக் கதைநூல்களையும், பயனுடைய அறிவியல் நூல்களையும் எளிய இனிய தமிழில் எழுதச் செய்து அவர் வெளியிட்டார். 'அணுவின் கதை' என்ற நூலில் அணுவைப்பற்றிக் கூறியிருந்த விளக்கம் கண்டு "இதுவரை வெளிவந்த ஆங்கில நூல்களில் கூட, இவ்வாறு எளிமையாக விளக்கப் பெறவில்லை" என்று இந்திய நூலகத் தந்தை டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் போற்றிக்கொண்டே யிருப்பார்.

மேல் திசையில் மெத்த வளரும் புதுப்புதுக்கலைகளைத் தமிழில் கொண்டு வந்து சேர்க்கவும் வ. சு. தயங்கவில்லை. தமிழ் மொழி அறிவியல் மொழியாக, ஆட்சி மொழியாக, சட்ட மொழி யாக, மருத்துவ மொழியாக—இவ்வாறு என்னென்ன வகையில் உருவாக வேண்டுமோ அனைத்துக்கும் அவர் வித்திட்டார். தமிழ் ஆட்சிமொழியாக ஆட்சிமொழிச் சொற்கள் பட்டியலை முதலில் உருவாக்கினார். சட்டவியல், தீங்கியல் சட்டம் போன்ற சட்ட

நூல்களைப் பேரறிஞர் மா. சண்முக சுப்பிரமணியம் அவர்களைக் கொண்டு படைக்கச் செய்தார். டாக்டர்கள் லோக முத்துக்கிருட்டிணன், ஜே. ஜி. கண்ணப்பன், எஸ். நடராசன், எம். இராசமாணிக்கம், என். எஸ் சுந்தரம் போன்ற மருத்துவப் பேரறிஞர்களைக் கொண்டு நரம்பு மருத்துவம், பல் மருத்துவம், தோல் மருத்துவம், எலும்பு மருத்துவம், கண் மருத்துவம் போன்ற மருத்துவத் துறை நூல்கள் தமிழில் முன்மாதிரியாக வருவதற்குக் காரணராக இருந்தவர் அவர்.

பல்வகையான நூல்களை உருவாக்கியதுடன் மட்டும் அவர்கள் நின்றுவிடவில்லை. தமிழ்மக்களிடையே இலக்கிய, சமய உணர்வு பரவ வேண்டுமென்பதற்காகப் பேரறிஞர்களைக் கொண்டு இலக்கிய, சமய மாநாடுகள் நடத்தினர். எட்டுத்தொகை நூல்கள் எட்டுக்கும் தனித்தனியாக மாநாடு நடத்தினர். பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்குகளுக்கும் தனித்தனி மாநாடுகள். இவ்வாறே சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், வரலாற்று மாநாடு, அரசியல் மாநாடு என்று பல்வேறு மாநாடுகளை அவர் கூட்டுவித்தார். அவர் மாநாடு நடத்தியதற்கும் பிறர் நடத்தியதற்கும் பெரும் வேறுபாடு என்னவெனில் மாநாடு தொடங்கும் போதே மாநாட்டுச் சொற்பொழிவுகள் அனைத்தும் நூல் வடிவில் வெளியிடப் பெற்றுவிடும். இம்முறை வேறு எவராலும் பின்பற்றப் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இது வ. சு. அவர்களின் தனி ஆற்றலை உணர்த்துகின்றது.

கழக அறநிலையமான இரு சங்கங்களின்வழி நல்ல பயனுடைய நிலையங்களை அவர் தோற்றுவித்தார். நெல்லையில் தமிழறிஞர்கட்கு உதவுவதற்கு 1950இல் 'சிவஞான முனிவர் நூல் நிலைய'த்தைத் தோற்றுவித்தார். மறைமலையடிகளார் தம் விருப்ப ஆவணத்தின்வழி கழகத்திற்குக் கொடுத்த 4000 நூல்களோடு வேறுபல நூல்களையும் சேர்த்து அவர்தம் பெயரிலேயே 'மறைமலையடிகள் நூல்நிலைய'த்தை 1958 இல் வ. சு. நிறுவினர்.

"தமிழ்க் கருவூலம், அறிவுப் பூங்கா, வரலாற்றுப் பொழில், கற்பகத்தரு" என்றெல்லாம் பாராட்டப்பெறும் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையம் உலகெங்குமுள்ள தமிழாய்வுப் பறவைகள் நாடிவரும் பழமரமாகத் திகழ்கிறது. எம்.பில். பி.எச்.டி, டி.லிட்., போன்ற பட்டங்களுக்கு ஆய்வு செய்வோர் இந்தியப் பல்கலைக் கழகங்களிலிருந்து மட்டுமல்லாது அமெரிக்கா, ருசியா, செர்மனி, இங்கிலாந்து, மலேசியா, இலங்கை போன்ற வெளிநாடுகளிலிருந்தும் வருகின்றனர். வ. சு. பிள்ளையவர்கள் இவ்வுலகிலிருந்து மறைவதற்கு மூன்று நாட்களுக்குமுன் அமெரிக்க நாட்டுக் கொலம்பியா பல்கலைக் கழகத்திலிருந்து நூலகத்தைப்

பார்வையிடுவதற்கென்றே வந்த அம்மையார் செல்வி பாலின் டினு லெசுனிக் "The collection of old, rare Tamil books is excellent. The literature of sangam and medieval periods of Tamil literature is special and in need of preservation. Mr. Muthukumaraswamy was kind and informative. A very good public library." என்று பாராட்டிச் சென்றுள் ளார். கழகத்தைத் தம் உயிரெனக் கட்டிக்காத்து வளர்த்த வ. சு. அவர்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்தை உயிரினும் மேலாகக் கருதினர்.

இவ்விரு நூல் நிலையங்கள் மட்டுமின்றி நீலாம்பிகையார் பல்கலைப் பள்ளி, தட்டச்சுப் பள்ளி, தையற்கலைப் பள்ளி, குமர குருபரர் குழந்தைப் பள்ளி போன்றவற்றையும் தோற்றுவித்து நெல்லைவாழ் மகளிர்க்கும் சிறுவர்க்கும் அவர் பெருந் தொண் டாற்றி வந்தார்.

கழகத்தின் வளர்ப்பு நிலையங்களான இவற்றுடன் அவர் தொடர்பு வைத்திருந்ததோடு, வேறு பல பொதுநல நிறுவனங் களிலும் அவர் தோன்று துணையாகவும் தோன்ருத் துணையாகவு மிருந்து தமிழ், சமய, இன உணர்வைத் தமிழரிடையே தூண்டி யுள்ளார்.

தமிழகத் திருக்கோயில்களில் உயிர்ப்பலி விலக்கு, தமிழ் நாட்டுத் திருக்கோயில்களிலுள்ள இறைவன் இறைவியரின் இயல்பான தமிழ்ப்பெயர்களை இடைக்காலத்தில் மாற்றியதை மீண்டும் முன்னிருந்த தனித்தமிழ்ப் பெயர்களாக வழங்கச் செய்தல், தொடர்வண்டி நிலையங்களில் நல்ல தமிழ் ஊர்ப் பெயர்கள் மிளிரச்செய்தல், நல்ல தமிழில் அழைப்பிதழ்கள் எழுதச் செய்தல், தமிழ்நாட்டு வடவெல்லைப் போராட்டம், தமிழ் ஆட்சி மொழியாதற்கு ஊர்கள் தோறும் 'ஆட்சிமொழி மாநாடுகள்' நடத்தியமை—அமைச்சர்கள் வாழும் வளமனைகளின் ஆங்கிலப் பெயர்களை மாற்றித் தனித்தமிழில் பெயரமைக்கும் திட்டம்— இவ்வாறு தமிழுணர்வு ஊட்டக்கூடிய பல செயல்களில் வ. சு. பிள்ளை ஈடுபட்டார்.

இவையனைத்துக்கும் மேலாக 1937-38 ஆண்டுகளில் இந்தி யெதிர்ப்புப் போராட்டத்தின்போது அதற்கெனத் தமையனருடன் இணைந்து 'தமிழ்ப் பாதுகாப்புக் கழக'த்தை நிறுவியதும் இந்தி யெதிர்ப்புப் பிரசுரங்கள் வெளியிட்டதும் ஊர்வலங்கள் நடத்தி யதும் மறியல்கள் நடத்தத் தூண்டுதலாயிருந்தமையும்—எல் லாமே பொன்னெழுத்துக்களில் பொறிக்க வேண்டிய பணிக

ளாகும். இன்றும் முதல் இந்தி எதிர்ப்புப் போரைப்பற்றி அவர் தொகுத்து வைத்துள்ள செய்திகள் வேறு எங்கும் காணக்கிடைக் காதவை.

தமிழ்மொழி, இன முன்னேற்றத்தைத் தவிர வேறு சிந்தனை அவர்களிடம் கிடையாது. அரசியலிலிருந்தவர்கள் அவருக்கு நண்பர்கள். ஆனால் அரசியலில் நாட்டம் கிடையாது. தந்தை பெரியார், காமராசர், அண்ணா முதல் இன்றுள்ள அமைச்சர்கள், எதிர்க்கட்சித் தலைவர்கள் அனைவருமே அவர்க்கு வேண்டி யவர்கள். ஆனால், நேரடி அரசியலில் கலந்துகொண்டால் தம் கழகப்பணி தடைபட்டுவிடுமே என்று எப்போதும் ஒதுங்கியே இருந்தவர்.

கழகம் பெரியதா, குடும்ப உறவு பெரியதா என்ற கேள்வி எழுந்தபோதெல்லாம் கழகமே பெரியது—அதுவே உயிர் எனக் கொண்டார். அதற்கு எந்தவித இன்னல் வந்தாலும் பொறுத்துக் கொள்ளமாட்டார் அவர். தம் குடும்பத்தைக் கவனிப்பதையே இரண்டாம் நிலையில்தான் எப்போதும் வைத்திருந்தார். இருப் பினும் குடும்பத் தலைவர் என்ற பொறுப்பிலிருந்து என்றுமே வழுவியதில்லை. இத்தனை நெருக்கடியான கழகப் பணிகளுக் கிடையேயும் தம் தமையனாரின் மக்கட்குத் திருமணம் முடித்து வைத்தார். தமக்குப் பிறந்த இரண்டே பெண்மக்களில் மூத்த மகள் வடிவழகி அம்மையாரைத் திருவாளர். இரா. கலியாண சுந்தரம், பி.எஸ்.ஸிக்கும் இளையமகள் வைரமணி அம்மையாரைத் திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.புக்கும் திருமணம் முடித்துப் பேரன் பேத்திகளைக் கண்டு மகிழ்ந்தார்.

கழக ஆட்சியரின் பல்வேறு பணிகளையும் கண்டு மைய, மாநில அரசுகள் அவருக்குப் பட்டங்கள் அளித்துப் பாராட்டிப் போற்றின. 1969இல் பேரறிஞர் அண்ணா அவர்கள் பரிந்துரை யின் பேரில் இந்திய அரசு 'தாமரைத்திரு' (பத்மஸ்ரீ) என்ற விருதை வழங்கியது. அந்நாள் குடியரசுத் தலைவர் டாக்டர். சாகிர் உசேன் அவர்கள் புதுதில்லியில் அவ்விருதை வழங்கினார்.

செந்தமிழில் நாட்டம் கொண்டு அதன் வளர்ச்சிக்காகவே தம் வாணாளை ஒப்படைத்த அப் பெருமகனார்க்குப் புரட்சித்தலைவர் மாண்புமிகு தமிழக முதல்வர் உயர்திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் 1979இல் 'செந்தமிழ்ச் செல்வர்' என்ற பட்டத்தையும் பொற்பதக்கத்தையும் வழங்கினார்.

தமிழ் ஆய்விற்கு நூல்கள் வெளியிட்டும் நூலகங்கள் வைத்தும் தொண்டாற்றியதைப் பாராட்டும் வகையில் மதுரை

காமராசர் பல்கலைக் கழகத்தார் பிள்ளையவர்கட்கு 1982இல் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற விருதினையும் ஐயாயிரம் உருபா மதிப்புள்ள பொற்பதக்கத்தையும் அதன் துணைவேந்தரான தனித் தமிழறிஞர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் அவர்கள் பரிந்துரையின் மேல் வழங்கிப் பாராட்டியது. அதே திங்களில் இசைக்கலைஞர், பாடகர் டாக்டர். பாலமுரளிகிருஷ்ணா அவர்கள் தம் அமைப்பின் கீழ் திருப்பனந்தாளில் பிள்ளையவர்களின் தமிழ்ப் பணியைப் பாராட்டிப் போற்றினார்கள்.

பல்லாண்டுகட்கு முன்னரே சென்னை மாணவர் மன்றம் 'செந்தமிழ் நூல் காவலர்' என்ற பட்டத்தை அவர்கட்கு வழங்கியது. 'தமிழ்மொழிக் காவலர்' 'சைவநெறிக் காவலர்' என்ற பல்வேறு பட்டங்களும் அவர்கட்குப் பல்வேறு அமைப்புகளால் வழங்கப்பெற்றுள்ளன. தமிழ்த்தொண்டு ஒன்றையே தம் குறிக்கோளாகக் கொண்டாரே தவிர இத்தகைய பட்டங்களையும் பாராட்டுகளையும் அவர் என்றும் விரும்பியதே யில்லை. அப்படி அவற்றைப் பெறும்போதும் தம் தொண்டு அனைத்திற்கும் வித்திட்ட தம் தமையனார் திருவரங்கனாரையும் அவர் உருவாவதற்குக் காரணராயிருந்த மறைமலையடிகளாரையுமே சாரும் என்று குறிப்பிடுவார்.

இத்தகைய அரிய ஆற்றல்கள் அனைத்தும் ஒருருக்கொண்ட பிள்ளையவர்கள் நாற்பதாண்டுகட்கு மேலாக இடையிடையே உடல் நலிவினால் பெரிதும் துன்புற்று வந்தார். அவ்வப்போது ஊசிகளும் மருந்துகளும் கொண்டு நோயைப் பொருட்படுத்தாது தொண்டாற்றி வந்தார். 1951இல் கடுமையான அம்மை நோயால் இலங்கையில் துன்புற்றபோது அவர் உயிர் தப்பியது அருட்செயலே. அந் நிலையில் அவரைக் காணச் சென்ற சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரும், முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரும் 'தமிழுக்கும் சைவத்திற்கும் கடுமையாக உழைக்கும் உமக்குக் கட்டாய ஓய்வு வேண்டுமென்றே இறைவன் உமக்கு இந்நோயைக் கொடுத்திருக்கிறான். நீர் விரைவில் நலமுறுவீர் நீடுவாழ்வீர்' என்று வாழ்த்தினார்களாம். பின்னொரு முறை திருச்சியில் காவிரியில் நீராடுகையில் நீர்ச்சுழலில் மூழ்கவிருக்கையில் அவர்தம் தமையனாரின் திருமகன் வைரமுத்து அவர்களால் காப்பாற்றப்பெற்றார். இவ்வாறு பலமுறை தப்பிப் பிழைத்த அவர் தம்முடம்பில் நீண்டநாள் குடியிருந்த நோயின் மிகுதியால் 18—1—83 அன்று சென்னை, மண்ணடி, 'நேசனல்' மருத்துவமனையில் சேர்க்கப்பெற்றார். அவர்தம் உடலுடன் இரண்டறக் கலந்திருந்த சளிநோய் அவர்தம் இன்னுயிரை 24—1—83 அன்று பிற்பகல் 2 மணிக்குக் கவர்ந்து சென்றது.

தமிழையே எழுதி, தமிழுக்காகவே வாழ்ந்த அவர் உடல் உயிரற்று ஓய்ந்தது.

தமிழ்த் திருமறையாம் திருக்குறளைப் பரப்புதற்குப் பெருமுயற்சிசெய்த பெருமகனாரின் புலன்கள் ஒடுங்கின. இறப்பதற்குச் சில நாட்களுக்குமுன், தாம் நாற்பதாண்டுகட்கு மேலாக வெளியிட்டு வரும் திருக்குறள் நாட்குறிப்பின் 1983ம் ஆண்டுக் குறிப்பு கையில் கிடைத்தவுடன், ஆண்டுப் பிறப்பான சனவரி முதல் நாளன்று அந்நாட்குறிப்பில் தம் கைப்பட 'இன்று 1-1-1983 திருக்குறள் பணியே கழகத்தின் பணியே—என் பணி' என்று நாற்பதாண்டுகட்கு மேலாக நாள்தோறும் நாட்குறிப்பு எழுதி அன்றன்று நடந்த செய்திகளைக் குறித்துவைக்கும் பழக்கம் கொண்டிருந்த, வ. சு. பிள்ளையவர்கள் கைப்பட எழுதியுள்ளார்கள். அதுவே அவர்கள் எழுதிய கடைசி நாட்குறிப்பு. இறப்பதற்கு முன்பும் திருக்குறளைப் பரப்புவதே தாம் நிலைப்படுத்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தலையான பணி யென்றும் அதுவே தம்முடைய வாழ்வுப் பணி யென்பதையும் தம் கைப்பட எழுதி வைத்துவிட்டுப் பெருமகனாரின் ஆவி அடங்கியுள்ளது.

வாய்மை, தூய்மை, நேர்மை, எளிமை, பணிவு, அடக்கம் முதலிய அனைத்து அருங்குணங்களும் ஒருங்கே வாய்க்கப்பெற்றிருந்த தமிழ்ச் சான்றோர், எப்போதும் முப்போதும் தமிழ் வளர்ச்சிபற்றியே சிந்தனை, எளிய உடை, இனிய தோற்றம், பணிசெய்வதிலும் செய்விப்பதிலும் கண்டிப்பு, கொண்ட கொள்கையில் உறைப்பு, நேர்மையிலிருந்து சிறிதும் வழுவாத் தன்மை, தமிழ்ப்புலவர்களைப் போற்றும் பாங்கு, புலவர்களிடம் குறையிருப்பினும் அவ்வவர்தம் நிறை ஒன்று மட்டுமே கண்ட பெருந்தன்மை, சிக்கனம், ஆழ்ந்த சைவப்பற்று, ஒழுக்கத்தில் விருப்பம், குறைகண்ட இடத்தில் கண்டிக்கும் தன்மை, தமிழ் துறைதோறும் வளர வேண்டுமென்ற ஆர்வம்—இத்தனையும் ஓருருக்கொண்டு விளங்கிய தாமரைத்திரு, செந்தமிழ்ச்செல்வர், பேரவைச்செம்மல் வயிரமுத்து சுப்பையாபிள்ளை—நிறைவாழ்வு வாழ்ந்த தமிழறிவின் பேரியக்கம் சாய்ந்தது, தமிழுக்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். அவர் கண்ட கழகத்தையும் அறநிலையங்களையும் தொடர்ந்து வெற்றியுடன் செயல்படுத்துவது அவருக்கு நாம் செய்யும் கைம்மாருகும்.

> "சுழன்றும் தமிழுலகம் சுப்பையாப் பின்னதும்
> உழந்தும் அவனே தலை."

———

# இறுதி நாட்களும் மறைவும்

தமிழ்ப் பணிக்காகத் தம் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டு மெலிந்த உடலோடு கடுமையாக உழைத்து வந்த கழக ஆட்சியர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் இருபதாண்டுகளாகச் சளித் தொல்லையால் அவ்வப்போது மருத்துவம் பார்த்து வந்தார்கள். கடந்த இரண்டு திங்களாக நெஞ்சுச் சளி அதிகமாகி மூச்சு விடுவதற்குச் சற்றுக் கடின நிலை ஏற்பட்டது. ஒரு திங்களுக்கு முன் ஒரு முறை தனியார் மருத்துவமனையில் அவர் தம் பேரன் நரம்பியல் மருத்துவப் பேரறிஞர் டாக்டர். கா. லோக முத்துக் கிருட்டிணன் பரிந்துரையின் பேரில் சேர்க்கப்பெற்று சிகிச்சை பெற்று ஓரளவு நலம் பெற்று வீடு திரும்பினர். சளி வெளிவருவது மட்டும் குறையவில்லை. 18—1—83 செவ்வாயன்று பகல் 2 மணியளவில் சளி தொண்டையில் சிக்கிக்கொண்டதால் அவர்கட்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டது. உடனே அவர்தம் மனைக்கருகிலுள்ள மருத்துவமனையொன்றில் சேர்க்கப்பெற்று நன்முறையில் சிகிச்சையளிக்கப் பெற்றார்கள். இருப்பினும் சளி அவ்வப்போது மூச்சுத்திணறலை ஏற்படுத்தியதால் 24—1—83 பகல் 2 மணியளவில் மருத்துவமனையிலேயே உயிர் நீத்தார்கள். தமிழையே தம் உயிர் மூச்சாகக் கொண்ட மாபெருந் தமிழ்த் தொண்டரின் மூச்சு ஓய்ந்தது.

உடனே அவர்தம் பொன்னுடல் பவழக்காரத் தெருவில் அவர்கள் ஐம்பதாண்டுகளாக வாழ்ந்து வந்த கழக இல்லத்திற்கு எடுத்துச் செல்லப்பெற்றது. மறைவுற்ற செய்தி அமைச்சர்கட்கும் அறிஞர்கட்கும் உற்றார் உறவினர்க்கும் உடனே தெரிவிக்கப் பட்டது. அன்று மாலை 6-30 மணியளவில் வானொலி தமிழ் நாடு முழுவதும் அவர்தம் மறைவைத் தெரிவித்தது. 8-30 மணிக்குத் தொலைக்காட்சியும் அவர்தம் படத்துடன் செய்தியை ஒளி பரப்பிற்று. இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி, தினத் தந்தி, தினமலர், மக்கள் குரல், முரசொலி, டைம்ஸ் ஆப் இந்தியா, எதிரொலி, விடுதலை முதலிய நாளிதழ்கள் அனைத்துமே மறைவுச் செய்தியை விரிவாக வெளியிட்டன.

செய்தி கேட்டவுடன் மேலவைத் தலைவர் ம. பொ. சி. அவர்களும் மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்களும் ஆட்சியருக்கு மாலை சூட்டி அஞ்சலி செலுத்தினர். மறுநாள் அமைச்சர்களும் அறிஞர்களும் அணி அணியாக வந்து அஞ்சலி செலுத்தி

னர். நேரில் வர இயலாததால் மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்களும் டாக்டர். கலைஞர். மு. கருணாநிதி அவர்களும் தம் இரங்கலுரையைத் தந்தி வழி அனுப்பினர்.

மாண்புமிகு அமைச்சர்கள் டாக்டர். நாவலர் இரா. நெடுஞ்செழியன், டாக்டர். கா. காளிமுத்து, சட்டமன்றத் தலைவர் க. இராசாராம், பேராசிரியர் க. அன்பழகன், முன்னாள் அமைச்சர் மா. முத்துசாமி, திரு. அ. செல்வராசன், எம்.எல்.ஏ., நீதிபதிகள் பு. ரா. கோகுலகிருஷ்ணன், மோகன், இரத்னவேல் பாண்டியன், முன்னாள் நீதிபதிகள் பி. எஸ், கைலாசம், சதாசிவம், ஏ. சிதம்பரம், அரசு அதிகாரிகள் திருவாளர்கள் எஸ். டி. காசிராஜன் ஐ.ஏ.எஸ்., டாக்டர். மா. நன்னன், டாக்டர் அவ்வை நடராசன், திரு தளவாய் சுந்தரம், துணைவேந்தர் வி. சி. குழந்தைசாமி, முன்னாள் துணைவேந்தர் நெ. து. சுந்தர வடிவேலு, வள்ளல் நா. மகாலிங்கம், எஸ். நாராயண பிள்ளை, பேராசிரியர்கள் அன்பு கணபதி, டாக்டர்கள். ந. சஞ்சீவி, மெ. சுந்தரம், ச. வே. சுப்பிரமணியம், சி. பாலசுப்பிரமணியம், ந. சுப்பு ரெட்டியார், முத்து கண்ணப்பர், பூவண்ணன், ஆ. சிவலிங்கனார், வா. இரத்தின சபாபதி, அறவாணன், தாயம்மாள் அறவாணன் மா. ரா. தமிழரசி, யோகீசுவரன், தி. வ. மெய் கண்டார். அறிஞர் பெருமக்களான கா. அப்பாத்துரையார், அலமேலு அப்பாத்துரையார், சௌந்தரா கைலாசம், கீ. இராமலிங்கனார், கோ. முத்துப்பிள்ளை, க. சி. கமலையா, இரா. மதிவாணன், பாவலரேறு பெருஞ்சித்திரனார், டாக்டர். கு. மோகனராசு, மணவை முஸ்தபா, டி. வி. கமலசாமி, டி. வி. இலட்சுமணசாமி, ஏ. கே. செட்டியார், முல்லை முத்தையா, பாரி செல்லப்பர், புத்தனேரி சுப்பிரமணியம், சிறுவை மோகன சுந்தரம், பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், மருத்துவப் பேராசிரியர்கள் ஜே. ஜி. கண்ணப்பர், டாக்டர் தெய்வநாயகம், டாக்டர் லோகமுத்துகிருட்டிணன், குடிநீர் வாரியத் தலைமைப் பொறியாளர் திரு. தெய்வமணி மற்றும் பலர் ஐயா அவர்கட்கு மாலை அணிவித்து இறுதி வணக்கம் தெரிவித்தனர்.

25—1—83 மாலை 5 மணியளவில் ஐயாவின் பொன்னுடல் அவர்கள்மீது குவிக்கப்பெற்ற மாலைகளால் அணி செய்யப்பெற்ற கை உந்து வண்டியில் இறுதி ஊர்வலமாகத் தங்கசாலை சந்திப் பருகில் உள்ள மூலகொத்தளம் நன்காட்டிற்கு எடுத்துச் செல்லப் பெற்றது. இறுதி ஊர்வலத்தில் தமிழன்பர்கள் திரளாகக் கலந்துகொண்டனர்.

ஐயா அவர்கள்தம் பொன்னுடல் எரியூட்டப் பெறுதற்குமுன் அவர்தம் பணி பாராட்டும் இரங்கல் கூட்டம் நடைபெற்றது. பாவலரேறு பெருஞ்சித்திரனார், பேராசிரியர் அன்பு கணபதி, பேரா. க. ப. அறவாணன், புலவர் இரா. இளங்குமரன், இரா. மதிவாணன், பேரா. சிவ. சிவராமலிங்கம், நெல்லை. ஆ. கணபதி, கவிஞர் தி. மு. சங்கரலிங்கம், பெருங்கவிக்கோ வா. மு. சேது ராமன், க. சி. கமலையா, சிறுவை மோகன சுந்தரம், ஆ. கந்த சாமி, கோவை A. இராசகோபாலன், A. T. ஈஸ்வர முதலியோர் உரை நிகழ்த்தினர். அதன்பின் பொன்னுடல் எரியூட்டப் பெற்றது.

ஆட்சியர் அவர்களின் மறைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் சென்னை வானொலி நிலயம் 27—1—83 இரவு 9-15 மணிக்குச் சிறப்பு நிகழ்ச்சி ஒன்றை ஒலிபரப்பியது. மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன், பேரா. டாக்டர். ந. சஞ்சீவி, பேரா. பி. திருஞான சம்பந்தம் ஆகிய மூவரும் ஐயா அவர்களின் அருந் தொண்டினைப் பல்வேறு கோணங்களில் படம்பிடித்துக் காட்டி னர்.

கழக ஆட்சியரின் மறைவுக்கு இரங்கல் தெரிவித்துத் தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் தமிழறிஞர்களும் தமிழன் பர்களும் மடல்கள் அனுப்பிய வண்ணமுள்ளனர்.

## இரங்கற் கூட்டம்

12—2—83 மாலை சென்னைக் கோகலே மண்டபத்தில் மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தலைமையில் தென்னிந்திய தமிழ்ச்சங்கச் சார்பில் 'கழக ஆட்சியர் வ.சு. நினைவுக் கூட்டம்' நடைபெறுகிறது. செட்டிநாட்டரசர் மு. அ. முத்தைய செட்டியார் ,ஐயா அவர்கள் திருவுருவப் படத்தைத் திறந்து வைப் பார்கள். மற்றும் டாக்டர் சிலம்புச்செல்வர் ம. பொ. சி. மாண்புமிகு. கே. ஏ. கிருஷ்ணசாமி, திருவாளர்கள் எம். பக்தவத் சலம், சி. சுப்பிரமணியம், நீதிபதி. எஸ். இரத்தினவேல் பாண்டியன், வள்ளல் நா. மகாலிங்கம், டாக்டர்கள். கா. மீனாட்சி சுந்தரம், அவ்வை நடராசன், மா. நன்னன், சி. பாலசுப்பிர மணியம், ச. வே. சுப்பிரமணியம், மெ. சுந்தரம் முதலியோர் கலந்துகொண்டு இரங்கலுரை நிகழ்த்துகின்றனர்.

———

# கழக ஆட்சியாளருக்கு வானொலியில் இரங்கலுரைகள்

கழக ஆட்சியர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா அவர்களின் மறைவு குறித்து 27-1-83 அன்று சென்னை வானொலி ஒலிபரப்பிய சிறப்பு இரங்கலுரை நிகழ்ச்சியில் பெருமக்கள் பலர் வழங்கிய இரங்கலுரைகள் வருமாறு:

தமிழக அரசின் சுற்றுலாத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் 85 ஆண்டு வாழ்ந்து தமிழ்நாட்டிற்கும், தமிழ் இலக்கியத்திற்கும் ஆற்றியிருக்கும் தொண்டுகள் தமிழ்மக்களின் வாழ்வில் நிலைத்து நிற்கக்கூடிய மகத்தான தொண்டுகளாகும்.

"சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இல்லையென்றால் இன்றைக்கு நாம் பெருமைப்படக்கூடிய தமிழ் இலக்கிய நூல்கள் நமக்குக் கிடைக்காமலே போயிருக்கும். திரு. சுப்பையா பிள்ளையவர்கள் தம் வாழ்நாள் முழுமையும் தமிழுக்காவும் தமிழ் இலக்கியத்துக்காகவும் தம்மை ஒப்படைத்துக்கொண்டார்கள். அவர்கள் உருவாக்கியிருக்கும் தமிழ் உணர்வும் இலக்கிய உணர்வும் என்றென்றைக்கும் தமிழ்ச் சமுதாயத்திற்குத் துணை நிற்கும்.

"அவர்களுடைய கடைசி மூச்சு காற்றிலே கலக்கிறவரையில் தொண்டாற்றிப் பிரிந்திருக்கிறார்கள். தம் குடும்பத்தைப்பற்றிக் கவலைப்படாமல், தமிழ்மொழிக்காகக் கடமையாற்றிவிட்டுக் கண்ணயர்ந்திருக்கிறார்கள் என்றுதான் கூறவேண்டும். அப்படிப் பட்ட பெரியவரை இழந்து துயருறும் அவர்தம் துணைவியார்க்கும், அவர்தம் குடும்பத்தார்க்கும், இவர்கள் எல்லாரையும்விட மிக்க துயரத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் தமிழ்மக்களுக்கும் என்னுடைய ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். திரு. சுப்பையா அவர்களின் புகழ் வாழ்க! வளர்க!"

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் இலக்கியத்துறைப் பேராசிரியர், டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள்,

"தலைசிறந்த, கலைசிறந்த தமிழ்க் கிழவராய்—சிவப்பழமாய் விளங்கிய தமிழ்ப் பாதுகாப்புத் தலைவர் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார். தமிழ் வளர்ச்சிக்கு—தமிழர் முன்னேற்றத்திற்கு ஓய்வே

கூடாது என்று ஓயாது உழைத்த ஒருவர் உடலால் ஓய்ந்து விட்டார். ஆம்; அவர் உள்ளமும் உயிரும் ஒருநாளும் ஓயா. தமிழுக்காகவும் தமிழருக்காகவும் அவர் திரும்பத் திரும்ப உழைத்துக்கொண்டேயிருப்பார். பிறவாவிடினும் விண்ணி லிருந்துகொண்டு தக்காரைப் பிறக்க வைத்துக்கொண்டே யிருப்பார்.

திருவாளர் சுப்பையா அவர்கள் ஒரு முதிர்ந்த பழம். அப் பழம் உதிர்ந்துவிட்டது. ஆனல் அப் பழவித்திலிருந்து மேலும் பல ஆல மரங்கள் முளைக்கும். திரு. சுப்பையா அவர்கள் தனி மனித வடிவில் திகழ்ந்த ஒரு பெரும் தமிழ்ப் பாதுகாப்பு நிலையம். அவர் அறிவியல், சட்டம், சமயம், ஆய்வுநூல்கள், அகராதிகள், குழந்தை நூல்கள், முதியோர் நூல்கள் எனப் பலதுறைகளில் 1700க்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளார்.

தமிழக அரசுக்கு அவர் செந்தமிழ்ச் செல்வரானர்; இந்திய அரசுக்குத் தாமரைச் செல்வரானர்; தமிழ்மக்களின் உணர்வுக் கெல்லாம் விருந்தாகத் தமிழ் விளங்கும்படி அவ்வப்போது எழுச்சி மிக்க மாநாடுகள்— விழாக்கள் எடுத்தார். 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்களிதழை அரை நூற்றுண்டுகட்கு மேலும் வெற்றியுடன் நடத்த வழிகண்டார். மறைமலையடிகள் நூலக மூலம் தமிழ் ஆய்வாளர்களுக்குக் காமதேனுவாக—கற்பக தருவாக—அமுத சுரபியாகக் காட்சியளித்தார்.

தமிழுக்கு ஊறு நேர்ந்த போதெல்லாம் படைக்கலங்களைப் படைத்து உதவினர். எல்லா அரசியல் கட்சிகட்கும் இனிய ராய் விளங்கிய அவர்தம் அறிவும் ஆற்றலும் போற்றி வியந்து வாழ்த்தி வணங்கத்தக்கவை. தமிழின ஒருமைப்பாட்டுக்கு அவர் வாழ்வும் வழியுமே சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். தமிழ்ப் புலவர்களுக்கும், தலைவர்கட்கும், மாணவர்க்கும், ஆசிரியர்க்கும் கோட்டையாகவும், கலங்கரை விளக்கமாகவும் திகழ்ந்த அவருக்கு நாம் செய்யும் நன்றி அவர் உருவாக்கிய அமைப்புகளைப் போற்றி வளர்ப்பதும், அவர்கண்ட கனவுகளை நனவாக்குவதுமேயாகும். வாழ்க சுப்பையா அவர்களின் தமிழ்ப் புகழ்! வளர்க அவர்தம் தமிழ்த் தொண்டுகள்.''

**பைந்தமிழ்ப் பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநர் பேராசிரியர் திருஞானசம்பந்தம் அவர்கள்,**

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் மறைவு தமிழ்நாட்டிற்குப் பேரிழப்**

பாகும். சங்க இலக்கியம்—இடைக்கால இலக்கியம்—தற்கால இலக்கியம் ஆகியவற்றை அறிய வேண்டுமானல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்குச் சென்ருல் போதும். எல்லாமே அங்குக் கிடைக்கும். மறைமலையடிகள் நூல்நிலையத்தைத் தமிழ் நாட்டுக்கு அளித்த பெருமை அவருக்குண்டு; அவருடைய இறப்பு தமிழுலகிற்குப் பேரிழப்பாகும்.

———

## தமிழுக்கு ஈடுசெய்யமுடியாத பேரிழப்பு

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள், 'தமிழ் மொழிக்காவலர்', 'சைவ நெறிக்காவலர்', என்ற பட்டப் பெயர்களுக்கெல்லாம் பொருத்தமுடையவராக வாழ்க்கை நடத்தினர்.

"மூன்று தலைமுறைகளுக்கு முன்பு தமிழ்நூல்களை—குறிப்பாக, சங்க இலக்கிய நூல்களை வெளியிட ஒரு நிறுவனம் இல்லாமலிருந்தது. டாக்டர் உ. வே. சா. போன்ற தனி நபர்களே அப்பணியிலீடுபடவேண்டியிருந்தது. அந்தக் குறையைப்போக்கத் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தொடங்கி, ஆதரவற்ற சூழ்நிலையிலும், அந் நிறுவனத்தை அரும்பாடுபட்டு நடத்தி நன்கு வலுப்பெறச் செய்தார். புலவர்கள் பலருடைய நூல்களை வெளியிட்டு, அவர்களுக்கு வாழ்வளித்தார். தமிழ் வளர்ச்சிக்கான பணிகளிலும், கருத்துச் செலுத்திப் பல அகராதி நூல்களைக் கொண்டுவந்தார். அவ்வகையில் தமிழக அரசு தமிழ் வளர்ச்சிக் கழகத்தைத் தொடங்கிய காலந்தொட்டு அதற்கு ஒத்துழைப்புத் தந்தார்.

"திரு. பிள்ளையவர்கள் தமிழ்மொழியின் தனித்தன்மையைக் காப்பதிலே எல்லையற்ற ஆர்வம் காட்டிவந்தார். தனித்தமிழின் காவலர் என வாழ்ந்த மறைமலையடிகளாரிடம் அளவற்ற பற்று வைத்திருந்தார்.

"சென்னை லிங்கசெட்டித் தெருவிலே 'மறைமலையடிகள் நூல்நிலையம்' என்ற பெயரில் மிகப் பெரிய நூல்நிலையமொன்றை நிறுவி அதனைச் சிறந்த ஆராய்ச்சிக் கூடமாகவும் வளர்த்து வந்தார். அவரது மறைவு உண்மையிலேயே தமிழுக்கு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும்."

—செங்கோல் 30-1-83



கழக ஆட்சியாளரின் அன்னையார்
வயிரமுத்து சுந்தரத்தம்மையார்



தமையனார் திருவரங்கனாரும்
அவர்தம் இளவல் வ. சு. அவர்களும்

## கழக ஆட்சியர் வ சு. அவர்களின் குடும்பம்



மனைவி, மக்கள், மருகர், பேரன், பேத்தியர்களிடையே வ. சு. அவர்கள்



1969ல் குடியரசுத் தலைவர் டாக்டர் சாகிர் உசேன் அவர்கள்
கழக ஆட்சியர் வ. சு. அவர்களுக்கு
தாமரைச் செல்வர் (பத்மஸ்ரீ) பட்டம் வழங்குதல்



புரட்சித் தலைவர் எம். ஜி ஆர். செந்தமிழ்ச் செல்வர் பட்டத்தினை வழங்க அதனைக் கழக ஆட்சியர் வ. சு. பெறுகிறார்



மதுரைப் பல்கலைக் கழகத்தின் சார்பில், கழக ஆட்சியருக்குப் 'பேரவைச் செம்மல்' பட்டத்தினை வழங்குகிறார் கல்வி அமைச்சர்



பேரறிஞர் அண்ணாவுடன்



தந்தை பெரியாருடன்



பெருந்தலைவர் காமராசருக்குப் பிறந்தநாள் பரிசு வழங்குதல்



கலைஞருடனும், நாவலருடனும்

# பெருமக்களின் இரங்கலும் கருத்துரைகளும்

### நினைவு கூரத்தக்க தொண்டுகள்

திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் மறைவு குறித்துப் பெருந்துயர் அடைகின்றேன். புகழ்பெற்ற பதிப்பாளராக விருந்து, தமிழ்மொழிக்கும் இலக்கியத்திற்கும் அவர் ஆற்றிய தொண்டுகள் என்றும் நினைவு கூரத்தக்கவை. அவரது குடும்பத்திற்கு எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன்,
தமிழ்நாட்டு முதலமைச்சர்.

### தமிழ் நெஞ்சங்கள் வ. சு. அவர்களை வாழ்த்தும்

"தமிழில் என்ன இருக்கிறது ? என்று சிலர் கேட்கிறார்கள். ஒருமுறை கழகத்திற்குப் போய் வந்தால் தமிழில் என்ன இருக்கிறது என்பது புரியும்" என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒருமுறை குறிப்பிட்டார்கள்.

'தமிழுக்கு ஆக்கம் தந்து அதன் அருமை பெருமைகளை எடுத்துரைக்கும் கழகம்' என்று பேரறிஞர் அண்ணா சுட்டிக்காட்டியது அரிய நூல்கள் பலவற்றை அழகிய முறையில் வெளியிட்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் புதிய காலகட்டத்தைப் படைத்த தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத்தான்.

'தமிழ் என்றால் கழகம்; கழகம் என்றால் தமிழ்' என்று எண்ணத்தக்க வகையில் தமிழோடு கழகம் பின்னிப் பிணைந்து கிடக்கிறது. அந்தக் கழகத்தைக் கட்டிக்காத்து, பேணி வளர்த்த பெருமை பெரியவர் செந்தமிழ்ச் செல்வர் திரு. சுப்பையா அவர்களையே சாரும்.

பதிப்புத் துறையில் ஈடுபட்டு, பழந்தமிழ் இலக்கியச் செல்வங்களை வெளிக்கொணர்ந்த ஆற்றலாளர்கள் வரிசையில் தலைசிறந்த இடத்தைப் பெற்ற "வ. சு." அவர்கள் தமிழ்மொழியின் தொன்மைச் சிறப்பையும் புதுப்பொலிவையும் எடுத்துக் காட்டியவர் ஆவார். பல துறையிலும் தமிழ் நூல்கள் பரவ வேண்டும் என்ற ஆர்வத்தால் உந்தப்பட்ட "வ. சு." அவர்கள், எந்தத் தனி மனிதரோ அல்லது நிறுவனமோ ஆற்றமுடியாத அரும் பணியினை, கழகத்தின் வாயிலாகச் செய்து முடித்திருக்கின்றார்.

தமிழ் இலக்கிய வரலாற்று வளர்ச்சிப் பாதையில் தனி ஒருவராய் நின்று தம் அடிச்சுவட்டைப் பதித்திருக்கின்றார். கடந்த அறுபது ஆண்டுகளில் கழகம் வெளியிட்டிருக்கின்ற நூல்களும், பதிப்பித்திருக்கும் இலக்கியங்களும் தமிழ்மொழிக்கு வலிவூட்டுகின்றன.

வணிக நோக்கும், இலாப இலக்கும் மலிந்திருக்கும் பதிப்புத்துறையில் இலட்சியப் பிடிப்போடு வாழ்ந்து தமிழுக்குத் துறைகள்தோறும் தொண்டாற்றிய பெருமை "வ. சு." அவர்களுக்கு உண்டு.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்"

என்ற பாரதியின் கருத்துக்கேற்ப மருத்துவம், அறிவியல், பொறியியல், இலக்கியம், ஆன்மீகம் சம்பந்தமான ஆங்கில நூல்களைத் தமிழில் வெளியிட்ட கழகக் காவலர் "வ. சு." அவர்கள் "தேமதுரத் தமிழோசை உலகமெலாம்" பரவுவதற்கான பணிகளிலும் ஈடுபட்டு, தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டார்கள்.

திரு. வ. சு. அவர்கள் தமிழுக்கு ஆக்கந்தரும் நூல்களை வெளியிட்டதோடு, தமிழ் வளர்ச்சிக்கு உரமூட்டும் மாநாடுகள், விழாக்கள், கருத்தரங்கங்கள் நடத்தியதோடு தமது பணி முடிந்துவிட்டதாகக் கருதியவர் இல்லை. தமிழ்மொழியைப் பாதுகாப்பதிலும், பிறமொழி ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடுவதிலும் அவர் முனைப்புடன் செயல்பட்டார். அந்த வகையில் அவர் காட்டிய ஆர்வமும் ஆற்றிய கடமையும் தமிழ்கூறும் நல்லுலகத்தால் என்றும் நினைவுகூர்ந்து போற்றப்படும் என்பதில் ஐயமில்லை.

'உழைப்பின்வாரா உறுதிகள் உளவோ' என்ற கருத்துக்கு இலக்கியமாக விளங்கி உடல் தளர்ந்தாலும் உள்ளம் தளராது ஓய்வின்றி உழைத்த அந்த உத்தமர் - தமக்கென வாழாது தமிழுக்கென வாழ்ந்து, மறைந்துபோக இருந்த பல தமிழ் நூல்களை மக்கள் நடுவில் தவழச் செய்த அந்தத் தகைமையாளர் - உலக வாழ்வினின்று ஓய்வு பெற்றுவிட்டார். ஆனால் அவர் ஊட்டிய தமிழ்ப்பற்றும் உருவாக்கிய கழகமும் நிலைபெற்று வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

"பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய் அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
இறப்பின்றித் துலங்குவாயே"

என டாக்டர் உ. வே. சா. வை - பாட்டுக்கொரு புலவன் பாரதி வாழ்த்தியதுபோல் தமிழ் நெஞ்சங்கள் 'வ. சு.' அவர்களை வாழ்த்தும் என்பதில் ஐயமில்லை.

வாழ்க 'வ. சு.' அவர்களின் புகழ் !

மாண்புமிகு இராம வீரப்பன்

*அமைச்சர், செய்தி-அறநிலையத்துறை.*

## நூல்களை வெளியிட்ட நுண்ணறிவாளர்

முதுமை நிறைந்த வயதிலும், முத்தமிழ் வளர்க்கும் ஆர்வத்தால், சுறுசுறுப்பாகச் செயல்பட்ட சுப்பையா அவர்கள், நீண்ட கால உழைப்பிலிருந்து ஓய்வு பெற்ருர் - நிரந்தர ஓய்வு பெற்ருர்.

அவரது இழப்பு இயற்கையானது என்ருலும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். இந்நூற்பதிப்புக் கழகத்தில் ஏற்பட்ட அவரது இடத்தை நிரப்ப, அவரால் உருவாக்கப்பட்டு — பயிற்சியளிக்கப்பட்ட திருவாளர் முத்துக் குமாரசாமி அவர்கள் இருக்கிருர் என்பதைப் பார்க்கும்போது, ஆறுதல் அடைகிருேம்.

ஒரு மொழியின் வளர்ச்சியில் முக்கிய இடம் பெறுவது பதிப்புத் துறையாகும். தமிழகத்தில் பதிப்புத் துறைகளின் பணி, பல்கலைக் கழகங்களின் முக்கிய பணியோடு தொடர்புடையது. ஒரு பல்கலைக் கழகம் சமுதாயத்தில் முத்திரை பதிப்பது, அப் பல்கலைக் கழகத்தின் பதிப்புத்துறை வெளியிடும் புத்தகங்களைப் பொறுத்ததாகும். வெளிவரும் புத்தகங்களே, ஒரு பல்கலைக் கழகத்தின் சிறந்த பணியை வெளிப்படுத்தும்.

அந்த வகையில் ஒரு பல்கலைக் கழகம் ஆற்ற வேண்டிய மகத்தான பணியைத், தனி மனிதரான திருவாளர் சுப்பையா அவர்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்னும் நிறுவனத்தை ஏற்படுத்தி, அதன்மூலம் செம்மையாய்த் தமிழ்ப்பணி செய்தார்.

தமிழகத்தைப் பொறுத்தவரை, பதிப்புத்துறையில், வெளிநாட்டு நிறுவனங்கள் (ஹிக்கின் பாதம்ஸ் - மேக்மில்லன் - ஆக்ஸ்போர்டு - ஓரியண்டல் லாங்மென்) புத்தகங்களைப் புதிது புதிதாக வெளியிட்டுக் கல்வி வளர்ச்சிக்கு உயிரூட்டி வந்தன.

ஆனுல், வெளிநாட்டு நிறுவனங்களோடு போட்டி போடும் அளவுக்குத், தமிழகத்தில், 'தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' நிறுவப்பட்டுச் செயல்பட்டு வந்தது என்பதை நினைக்கும்போது உள்ளம் பூரிப்படைகிறது.

வ. உ. சி. அவர்கள், வெள்ளைக்காரர்கள் கப்பல் போக்கு வரத்துத் துறையில் செலுத்திய ஆதிக்கத்துக்கு முடிவுகட்டும் வகையில் புதிய கப்பல் போக்கு வரத்தை ஆரம்பித்தார். அதனால் 'கப்பல் ஓட்டிய தமிழன்' என்று மக்களால் பாராட்டப் பெற்றார்.

அதுபோல், பதிப்புத் துறையில் இருந்த வெளிநாட்டார் ஆதிக்கம் குறையும் வகையில், திருவாளர் சுப்பையா அவர்கள், தம் முடைய சுய முயற்சியில் 'நூற்பதிப்புக் கழகம்' துவக்கினார். மறைந்திருந்த - பார்க்க முடியாத பழந்தமிழ் ஏடுகளையெல்லாம் பதிப்பித்துத் தமிழ் இலக்கிய வீதியில், உலாவரச் செய்து, தமிழ் வளர்ச்சிப் பணிக்குப் பெரும்பங்கு ஆற்றினார். அதனால் திரு வாளர் சுப்பையா அவர்கள் எடுத்துக்கொண்ட நுட்ப அறிவினை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

திருவாளர் சுப்பையா அவர்களின் இறவாத பணியைப் பாராட்டி 'கப்பலோட்டிய தமிழன்' என்று வ. உ. சி. அவர் களைப் பாராட்டியது போல 'நூல்களை வெளியிட்ட நுண்ணறி வாளர்' என்று கஞ்சத்தன மில்லாமல் மனந்திறந்து பாராட்ட லாம்.

நூல்களை வெளியிட்ட நுண்ணறிவாளர் சுப்பையா அவர் களின் நூற்பதிப்புக் கழகமும், மறைமலையடிகள் நூலகமும் தமிழ் உள்ளவரை, புகழ்பாடிக்கொண்டிருக்கும். வாழ்க அவரது புகழ்! வளர்க அவரது பணி!

மாண்புமிகு கா. காளிமுத்து,
அமைச்சர் வேளாண்மைத்துறை.

திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் மறைவுச் செய்தி கேட்டுப் பெருந்துயர் அடைந்தேன்.

மாண்புமிகு கே. ஏ. கிருஷ்ணசாமி,
அமைச்சர் சிற்றூர் வளர்ச்சித்துறை.

### தமிழ் உள்ளவரை கழகமும், வ. சு. அவர்களின் புகழும் வாழும்

தமது தமிழ்த்தொண்டாலும், சமுதாயப் பணிகளாலும் மக்கள் நெஞ்சில் நிலைத்து வாழும் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் செந்தமிழ்ச் செல்வி மலர் வெளியிடவிருப்பது சிறப்பு மிக்க பணியாகும்.

திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மட்டும் தோற்றுவிக்கப்படாமல் இருந்திருக்குமேயானால், பல தொன்மையான தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களை நாம்

அச்சு வடிவில் கண்டிருக்க முடியாது. இந்த நூற்பதிப்புக் கழகத்தின் வளர்ச்சியும் திரு. சுப்பையா பிள்ளையின் வாழ்க்கையும் பிரித்துப் பார்க்க முடியாத வகையில் ஒன்றோடு ஒன்று இணைந்து பெருமைக்குரியதாக விளங்கியதாகும்.

தமிழ் இருக்கும் வரை அவர் கண்ட நூற்பதிப்புக் கழகம் வாழும். கழகம் இருக்கும் வரை சுப்பையா பிள்ளை அவர்களின் புகழ் நிலைத்து நிற்கும்.

மாண்புமிகு ச. இராமச்சந்திரன்,
*அமைச்சர் மின்துறை, தமிழக அரசு.*

## மனவேதனை அடைகிறேன்

திரு. சுப்பையா பிள்ளை யவர்கள் காலமான செய்தியறிந்து பெரும் மனவேதனை யடைகிறேன். எனக்கு அவர்களை நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக மிக நெருக்கமாகத் தெரியும், திரு. சுப்பையா பிள்ளை யவர்கள், தமிழுக்காகவும் தமிழ்நாட்டுக்காகவும் அரும்பாடு பட்ட அவரது இழப்புக்கு ஈடுசெய்ய முடியாது. அன்னாரின் குடும்பத்தார்க்கும் சைவசித்தாந்தக் கழகத்தார்க்கும் எனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மாண்புமிகு. ஆர். வி. சாமிநாதன்,
*வேளாண்மைத்துறைத் துணை அமைச்சர்*
*மைய அரசு, புது தில்லி.* (29-1-83)

திரு. சுப்பையா அவர்களின் மறைவுச் செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன். அவர்தம் குடும்பத்தார்க்கு என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

டாக்டர். கலைஞர் மு. கருணாநிதி.

## வருந்தத்தக்க மறைவு

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் மறைவெய்தியது பெரும் வருத்தம் அளிப்பதாகும். கடந்த அரை நூற்றாண்டுக்கு மேலாகக் கழகத்தின் மூலம் அரிய பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களையும், அரிய இலக்கிய ஆராய்ச்சி ஏடுகளையும் தொடர்ந்து வெளியிட்டு வருவதில் கழகம் பெற்ற வெற்றிக்கு அவரது ஆர்வமே காரணமாகும். மறைமலையடிகளார் நூலகம் சிறந்த முறையில் நிறுவப்பெற்றுள்ளதற்கான பெருமை அவர்களையே சாரும்.

அவர் ஆற்றிய தொண்டு எந்நாளும் நிலைப்பதாகும். அவரது மறைவு குறித்து வருந்தி நிற்கும் அவர்தம் குடும்பத்தார்க்கும் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பணியில் ஈடுபட்டிருப்போருக்கும் எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பேராசிரியர் க. அன்பழகன்.

## மாமேதைக்கு வணக்கம்

'தமிழே என் மூச்சு ; தமிழே என் பேச்சு ' என்றும், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றும் தம் வாழ்நாள் முழுவதை யும் தமிழ் வளர்ச்சிக்காக அர்ப்பணித்துக்கொண்டு, மாபெரும் சாதனைகளைப் புரிந்துவிட்டு, நம்மிடையிலிருந்து பிரிந்துவிட்ட அந்த மாமேதைக்கு என் உளமார்ந்த வணக்கம்.

வே. கார்த்திகேயன், ஐ. ஏ. எசு.
தலைவர், தமிழ்நாட்டுத் திட்டக் குழு.

## தமிழ்ப் பதிப்புத்துறைக்குப் பெரிய இழப்பே

திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ் நூல்களைச் சிறப்பாக அச்சிட்டு வழங்கும் மகத்தான பணியில் பெருந்தொண்டாற்றி வருகிறது. இதன் ஆட்சியாளரும் சிறந்த திங்கள் இதழ்களில் ஒன்றாகிய 'செந்தமிழ்ச் செல்வி'யின் ஆசிரியருமாகத் திகழ்ந்த அன்பர் வ. சுப்பையா பிள்ளை அவர் களின் மறைவு தமிழ்ப் பதிப்புத் துறைக்கே ஒரு பெரிய இழப் பாகும்.

தவத்திரு. சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்,
தருமையாதீனத்தலைவர், தருமபுரம்.

## அறிவுப் பசிக்கு விருந்தளித்தவர்

தமிழ் இலக்கிய வெளியீட்டுப் பணியில் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் பங்கு செம்பாகமன்று ; பெரிது. அவர்களின் பதிப்புத்துறை அனுபவத்தால் கழக விருட்சத்தில் கணக்கில்லாத கனிகள் கனிந்து, தமிழ்ப் பெருங் குடி மக்கட்கு ஏற்பட்ட அறிவுப் பசிக்கு விருந்தாயின. அன்னாரின் நினைவு மலர் அழகிய முறையில் அமைந்து பொலிவுற வாழ்த்துகின்றோம்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக் குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்,
அதிபர், காசிமடம், திருப்பனந்தாள்.

## மறக்க முடியாத மாமேதை

சுப்பையா பிள்ளை அவர்களிடத்தே இத் தமிழகம், சிறப்பாக சைவ உலகம் செம்மாந்து நிற்க இன்னருள் சுரந்து அன்னாரை நடத்தியதால் செந்தமிழ்ச் செல்வி எனக் கலைமகளும், அலைமகளும் அதிட்டித்து நின்றமையை இன்று உணர்கின்றோம். மாமேதை

யாகத் தமிழ் மாநிலத்தில் சிவ நூல் பக்தியைப் பெருக்கியவரை எந்நாளும் மறவாது, அந்தப் பெருந்தகை காட்டிய வழியில் இனி வரும் தலைமுறைகள் நடந்து நற்பெயருடன் திகழ வேண்டும் என்பதை இதுசமயம் எமது பேரவாவாக எடுத்தியம்பக் கடன்பட்டிருக்கிறோம்.

தவத்திரு ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்
மதுரை ஆதீனம்.

## சிவநெறிக்குப் பேரிழப்பு

சுப்பையா பிள்ளை அவர்களின் மறைவு செந்தமிழுக்கும் சிவ நெறிக்கும் பேரிழப்பாகும். அப்பெருமகனார் ஆற்றியுள்ள நூற் பதிப்புத் தொண்டு போற்றத்தக்கது. முதுமைக் காலத்திலும் இளமைத் துடிப்புடன் தமிழ்த் தொண்டாற்றியவர் அவர்.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்,
குன்றக்குடி ஆதீனத் தலைவர், குன்றக்குடி.

## நடுக்கற்ற காட்சியர்!

தென்பாண்டித் திருநெல்வேலியில் தண்டமிழ் நெறியும், சிவ வழிபாடும் தழைக்கப் பணிபுரிந்த ஆன்றோர் பலர். அவர் வழியில் திருவரங்கனாரின் இளவலாய், மறைமலையடிகளார் வழியில் கொள்கைப் பரப்புநராய் விளங்கியவர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை. தமிழ் வளர்ச்சியிலும், அயல்மொழி ஆதிக்கங்களைத் தடுத்து நிறுத்துவதிலும் நடுக்கற்ற காட்சியராய் வாழ்ந்த தமிழ்மகன். நுண்மாண் நுழைபுலத்துடன் அரிய நூல்கள் பலவற்றை ஆய்ந்தும், ஆயுந்திறனுடைய ஆன்றோர் பலரைப் பணி கொண்டும் வாழ்ந்த செந்தமிழ்த் திறலார். புலவர்களையும், தமிழ்நெறிச் சமயத் தலைவர்களையும் கண்டு புண்ணியக் கண்களாய்க் கருதி, அவர் காட்டும் செந்நெறியில் இன்பமிகும் இலக்கியப் பூங்காக்களை உருவாக்கியவர். பதிப்புத் துறையில் தன்னிகரற்ற வல்லாண்மையுடன் பலபல நூல்களை வழங்கிய செம்மலார். முதுமையிலும் தளரா ஆர்வத்துடன் சிவநெறியும், தமிழும் தழைக்க அயராது உழைத்த அவர் இம் மண்ணுலக வாழ்வினை நீத்தார் என்ற செய்தி தமிழுள்ளம் படைத்தோரைத் துணுக்குறச் செய்தது. சங்க இலக்கியங்களுக்கும், சமய இலக்கியங்களுக்கும் விழாக்கள் எடுத்து அரிய நூல்களை வெளியிட்ட அவர் நல்லுயிர் மாதொருபாகனும் செம்பொருட் சிவத்தின் இணையடிகளில் அமைதியுற வேண்டுவோமாக.

தவத்திரு. சாந்தலிங்க இராமசாமி அடிகள்,
கோயமுத்தூர்.

## தமிழுலகிற்குப் பேரிழப்பு

தமிழ்த் துறைக்குத் திரு சுப்பையா அவர்கள் ஆற்றிய அரும் பணிகளைப் பாராட்டு முகத்தான் மதுரை, காமராசர் பல்கலைக் கழகம் அவருக்குப் பட்டம் அளித்துச் சிறப்பித்தது. அவரது மறைவு தமிழ் உலகிற்கு, உண்மையிலேயே ஒரு பேரிழப்பாகும்.

ஜே. இராமச்சந்திரன், எம். ஏ., எ. எம். (சிக்காக்கோ)
துணைவேந்தர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

## வரலாற்றில் ஒரு தனியிடம்

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வரலாற்றில் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு ஒரு தனியிடம் உண்டு. அவரது மறைவு சைவ சமய உலகிற்கும், தமிழ் உலகிற்கும் ஒரு பேரிழப்பு ஆகும்.

கி. ஆ. பெ. விசுவநாதம்,
திருச்சி.

## தமிழுக்குச் செவிலித்தாய்

கழகம் பெற்றெடுத்துத் தமிழகத்தில் தவழவிட்ட செல்வங்கள் ஆயிரத்துக்கும் மேற்பட்டவை. அவற்றுக்கு நற்றாயாகவும், செவிலித்தாயாகவும் விளங்கியவர் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள். நினைவு மலர் வாயிலாக அவருக்கு என்னுடைய கைகூப்புதல்களைத் தெரிவித்துக்கொண்டு ஒருவாறு அமைகிறேன்.

ஓ. வி. அளகேசன்,
மைய அரசின் முன்னாள் அமைச்சர்.
செங்கற்பட்டு.

## அவரைப் போல் காண முடியுமா?

மறைந்த திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் பயனுள்ள முழு வாழ்வு வாழ்ந்த பெரியார். அவரைப்போல் உண்மையாகவும், கடினமாகவும் உழைக்கும் தக்காரை இனிக் காண்பது கடினம்.

மு. மு. இஸ்மாயில்,
முன்னாள் உயர்நீதிமன்றத் தலைமை நடுவர்.

## பாடல் சான்ற தமிழ்க்கிழவர்!

புலவர்களின் புரவலர்; மூச்சாலும், பேச்சாலும், செயலாலும் நிகரற்ற தமிழ்த் தொண்டர்; பாடல் சான்ற தமிழ்க்

கிழவர் ; கழகப் பொறுப்பாளர் தாமரைத் திரு. சுப்பையா பிள்ளையின் மறைவு மெய்யாகவே பேரிழப்பாகும். சிவனார் திருவடிக் கீழ் தாமரைத் திருவுடையார் இன்புறுவர். பிள்ளையின் தொண்டுச் சின்னமாகிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அவர்தம் புகழ் விளக்காக மேலும் இலங்குக.

டாக்டர். வ. சுப. மாணிக்கம்

## ஆற்றலை வெளிக் கொணர்ந்த பெரியார்

கற்பகத் தமிழ் மரங்களைக் கண்ணில் காட்டிக் கருத்தூன்றச் செய்த சான்றோரும், பல தமிழறிஞர்களின் புலமையை நூல் வாயிலாக வெளிக் கொணரப் பாடுபட்ட பெரியாரும், தமிழ் அண்ணலுமான பெரிய ஐயாவின் மறைவு அறிய அதிர்ச்சி யுற்றேன்.

டாக்டர். கா. மீனாட்சிசுந்தரம்,
இணை இயக்குநர், கல்லூரிக் கல்வித்துறை, சென்னை.

## தமிழ்ப் பாதுகாப்புக்கு ஒரு கேடயம்

தொண்டினைத் தொழிலாகக் கொண்டு வாழ்வோர் உள்ள இக் காலத்தில், தொழிலையும் தொண்டாகக் கருதிச் செய்த பெருமகனார் கழக ஆட்சியர். அவர்கள் தமக்கென வரையறுக்கப் பட்ட சில கொள்கைகளை உடையவர்கள். அவற்றில் உறுதியும், தெளிவும் உடையராகவும், அவற்றைப் பின்பற்றிச் செயல்படும் செயல் வீரராகவும் திகழ்ந்தார்கள். தமிழுக்கு ஏற்பட்ட பகைகளையும் நலிவுகளையும் தடுத்துக் காக்கும் ஒரு கேடயமாகத் திகழ்ந்தார்கள்.

பேராசிரியர் டாக்டர் மா. நன்னன்,
தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர், சென்னை.

## நினைவு, தமிழ் நினைவு

தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் வாழ்நாளெல்லாம் தமிழ் வளர அயராது பாடுபட்டார். அவர் மூச்சு தமிழ் மூச்சு; நினைவு தமிழ் நினைவு; நடமாட்டம் தமிழ் நடமாட்டம் என்ற அளவுக்குத் தமிழுடன் ஒன்றிப் போயிருந்தார். தமிழ் நூல்களைப் பிழையின்றி அச்சிட்டு வழங்கியதில் தமக்கெனத் தனியிடம் பெற்ற செம்மல் திரு சுப்பையா பிள்ளை அவர்கள். அவருடைய நன்முயற்சியாலும் கலை புதுமைத் திட்டங்களாலும் பழந்தமிழ்ப் பெருநூல்கள் பேழையுடன் தமிழ்நாட்டிலுள்ள நூலகங்களில் இடம் பெற்றன.

மறைமலையடிகள் நூல்நிலையம் அமைத்து மறையாப் புகழ் பெற்றவர் திரு. சுப்பையா பிள்ளை. இந்நூலகத்தை உயர்ந்த ஓர் ஆராய்ச்சிக் கூடமாக மாற்றிய பெருமை இவரையே சாரும். இத்தகைய செயற்கரிய செய்த பெரியார் புகழ் என்றென்றும் தமிழ் உள்ள இடமெல்லாம் நிலைத்து நிற்கும்.

கு. ஆளுடைய பிள்ளை, இ. அ. ப.
மாவட்ட ஆட்சித் தலைவர், மதுரை.

## ஊக்கந்தந்த உத்தமர்!

திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் எனது அறிவியல் கட்டுரைகளைச் செந்தமிழ்ச் செல்வியில் திங்கள் தோறும் வெளியிட அவாக்கொண்டு அடிக்கடி எனக்கு மடல் எழுதி என்னை ஊக்குவித்தமையை நான் என்றுமே மறக்க இயலாது. அவர் தந்த ஊக்கத்தாலும், ஆக்கத்தாலும் நான் இதுவரை தமிழ் இலக்கியங்கள்பற்றியும், அறிவியல் பற்றியும் 12 நூல்கள் எழுத முடிந்தது. கழக வழியாகச் சங்க இலக்கியத்தில் வரும் அறிவியற் செய்திகளை ஆராய்ந்து படங்களுடன் வெளியிட முன்வந்த திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களை என்றும் மறக்கவே முடியாது.

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களைச் சிக்கனமுடையவர் என்று கூறுவர். அவர் அவ்விதம் இல்லாதிருந்தால் கழகம் ஒரு பல்கலைக்கழகம் போன்று வளர்ந்திருக்க முடியாது. கட்டுரைகளை மெய்ப்புப் பார்ப்பதிலும், திருத்தமாக வெளியிடுவதிலும் அவர் முனைந்து நின்று செயல்பட்டதை நான் அறிந்திருக்கிறேன். திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தமிழ் நூல்களை முதன் முதலாகத் திருத்தமாகவும், சீரும் சிறப்புமாகவும் கொண்டுவந்ததில் அவரது பணி சிறந்து நிற்கின்றது.

அன்னாரது நினைவைப் போற்றி செய்து,தொடர்ந்து அவரது பணியை நடத்தி வந்தால் தமிழுலகம் முன்னேறும்; சிறப்புற்றிருக்க முடியும்.

அன்னாரது ஆத்மா சாந்தி அடைவதாக!

பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.
செயலாளர், புதுவை அரசு.

## தனிப்பெரும் நிறுவனம்

இன்முகத்துடன், எப்போதும் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கு உழைப்பதிலேயே தம் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்ட பெரியார் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள். அவர்களுடன் பேசும்போதும், உடன் இருக்கும் வாய்ப்பு பெற்றபோதும், தமிழ்

இலக்கியமும், தமிழ் நூல்கள் வெளிவர வேண்டிய இன்றியமையாத நிலையும், அப்பணியில் ஈடுபடும் ஊக்கமும் மேல் ஓங்கி நிற்கும். இதை ஊக்குவிக்கும் சக்தியாக ஒரு தனிப் பெரும் நிறுவனமாகத் திகழ்ந்தவர் அவர். எளிமையும், இனிமையும், அயரா உழைப்பும் கொண்ட இப்பெரியார் தமிழ்ப் பண்பாட்டுடன், வரலாறு, கலை, இலக்கியம் ஆகிய அனைத்துப் பிரிவுகளிலும் ஆர்வம் கொண்டு ஈடுபட்டிருந்தார். அன்னார் நல்ல நூல்களை வெளியிடுவதில் உள்ள இடர்ப்பாடுகள் அனைத்தையும் கடந்து நூற்றுக்கணக்கான நூல்களை வெளிக்கொணர்ந்து ஆற்றிய தொண்டை மனமார, உளமார வணங்கி அவரது நினைவுக்கு அஞ்சலி செலுத்துகிறேன்.

டாக்டர் இரா. நாகசாமி,

இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.

## இயேசுவின் இயல்புகளை வ. சு. விடம் கண்டேன்

தனித் தமிழ்ப் பெரியார் சுப்பையா அவர்கள் இளைப்பாறுதலில் இன்புறாது என்றும் இடையறாது உழைத்த உழைப்பின் வடிவம்.

கடிதக் கலைஞர் - பெரியோர்கள் படந்திரட்டிய பெருஞ் செல்வர் - வள்ளுவம் பரப்ப வழிகாட்டிய வள்ளல் - மறைமலையடிகளைப் போற்றச் செய்த மாண்பினர் - இந்தியை எதிர்த்திட முந்திய செம்மல் - திட்டமிட்டுச் செந்தமிழ் பரப்பிய அந்தண் குணத்தவர் - மாண்டு மறைந்த நூல்களை மீண்டும் உயிர் பெறச் செய்தவர் - பிறர் இயல்புகளை நிறுத்துப் பார்த்துக் கண்டுபிடிக்கும் திறலினர்.

பலநாட்டு பக்தர்கள் மதுரைவரும்போது மீனாட்சியைப் பணிந்து மகிழ்வார்கள். அதுபோல நான் சென்னை செல்லும் போது பன்முறையும் தாமரைச் செல்வர் வ. சு. அவர்களைக் கண்டு, உரையாடி அவருடைய பல்வேறு வகைவகையான பணித்திட்ட உழைப்பைக் கண்டு, உவகை கொண்டு, உயர் கருத்துப் பெறுவேன். உடனுண்டு உரையாடியபோது கூறியது ஒன்று உள்ளத்தில் மறவாது உள்ளது :

வ. சு. வுடன் பகைத்துக்கொண்டு விலகிநின்ற பேராசிரியர்க்கும், அரசியல் கட்சியர்க்கும் சிக்கல் நேர்ந்தபோது, அவர் தாமே வலியச் சென்று உதவிகள் புரிந்து சிக்கல் நீக்கிய வரலாறுகளைக் கேட்டபோது வ. சு. அவர்கட்கு வணக்கம் செலுத்தியது என் ஆன்மா. இயேசுவின் நேச இயல்புகளையும் பரிவு இரக்கங்களையும் அவரிடம் நான் கண்டுள்ளேன். பகைவர்க்கருளிய பண்பாளர். மதமோ சாதியோ அவர் நட்புறவுக்குத் தடைச்சுவ

ராக இருந்ததே இல்லை. எளியோர்க்கு இரங்கியவர்; உதவி புரிவது அவர் உள்ளத்தில் ஊறிய இயற்கை. "வாழ்வாங்கு வாழ்ந்து வானுறை தெய்வமாகிய திருவினர்."

அவர் பிரிவை நினைத்து வருந்தும்,

அறிவர் வீ. ப. கா. சுந்தரம்,
இசைத்தமிழ் ஆய்வாளர்,
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்.

## தமிழை வளப்படுத்தினர்

ஆயிரத்துக்கும் மேற்பட்ட இலக்கிய இலக்கணங்களையும் சமய நூல்களையும் வெளியிட்டு அவர்கள் தமிழை வளப்படுத்தினார்கள். கழகம் என்றாலே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்று நினைக்கும்படி அதற்குப் புகழமையச் செய்தார்கள்.

இன்மொழியும் பண்பும் இடைவிடா முயற்சியும் உடைய அவருடைய நினைவு நமக்கு ஊக்கத்தைத் தரும்.

கி. வா. ஜகந்நாதன்,
ஆசிரியர், கலைமகள், சென்னை.

## பதிப்பகத் துறைக்கோர் பரிதிபோன்றவர்

தாமரைச்செல்வர் தமிழுக்குப் பெருந் தொண்டு புரிந்த பெரியவர். பதிப்புத்துறைக்கொரு பரிதி போன்று விளங்கியவர். தனித் தமிழ் வளர்ச்சிக்காகவும், தமிழர்களின் நல்வாழ்வுக்காகவும் தம் இறுதிக்காலம் வரையிலும் ஓய்வின்றி உழைத்தவர். அவருக்கிருந்த நினைவாற்றல் பலருக்கில்லை. அவருடைய தமிழ்த் தொண்டுக்கு ஈடு இணையில்லை.

கவிஞர் சுரதா.
சென்னை-78.

## தலைசிறந்த வழிகாட்டி

தமிழ்த்தொண்டு செய்வது என்பது அவ்வளவு பெரிய ஒன்று அன்று என்பதை முதற்கண் தெரிந்துகொள்ள வேண்டும். தமிழ்த்தொண்டு என்பது ஒரு புடையிலேயே தோன்றி நிற்பதும் அன்று. அது முத்திறக் கூறுபாடுகள் உடையதாகும். தமிழைக் கற்பதுவுங்கூட தமிழ்த் தொண்டில் ஒருதிறக் கூறே. கற்க வேண்டியதைக் கசடறக் கற்றல்—கற்றுப்பெற்ற பயன் கூறுகளை வெளிப்படுத்தல்—அப்பயன் கூறுகளை அச்சிட்டு வெளிப்படுத்துகையில் அவற்றால் மக்களுக்கு நிலையான தொடர் பயன் விளைந்து கொண்டிருக்கின்ற வகையில் நிலைப்படுத்தல்—ஆகிய முத்திறக்

கூறுபாடுகளின் முற்றிய முதிர்வே தமிழ்த் தொண்டு என்னத் தக்கதாகும். இவ்விலக்கணப்படி இம் முந்நிலைகளிலும் கடந்த அறுபது ஆண்டுகளாக எவரும் செய்ய வியலாத ஒரு பெருந் தமிழ்த் தொண்டை நம் ''செந்தமிழ்ச் செல்வர்'' அவர்கள் சிறக்கவும் நிறக்கவும் ஆற்றினர். இவ் வகையில் தமிழினத் தொண்டர்கட்கு அவர் ஒரு தலைசிறந்த ''வழிகாட்டி'' ஆவார்.

பாவலரேறு பெருஞ்சித்திரனர்,
முதல்வர், உலகத் தமிழின முன்னேற்றக் கழகம், சென்னை.

## இறைவன் படைப்பு

''தன்னை நன்ருகச் செய்தனன் தமிழ் செய்யுமாறே'' என்று திருமூலர் இறைவன் தம்மைப் படைத்ததற்கான காரணத்தைக் கூறுவர். அவ்வாறே உயரிய தமிழ் நூல்களைச் செவ்விய முறையில் பதிப்பதற்காகவே இறைவன் உயர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களைப் படைத்தனன் என்றே கூறுதல் வேண்டும்.

தே. பெ. சு. பழனிசாமி,
மாவட்ட நீதிபதி, மதுரை.

## ஐயா பெயரில் அறக்கட்டளை நிறுவுக !

தம்முடைய அருமைத் தமையனர் திருவரங்கம் பிள்ளையவர்கள் தொடங்கிய நூற்பதிப்புப் பணியினை மேன்மேலும் வளர்த்த திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் குறிக்கோள் இனிது நிறைவேற, அவர்கள் பெயரால் அறக்கட்டளையினை நிறுவி அவர்களது புகழுருவினைப் போற்றுதல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தலையாய கடமையாகும்.

பேராசிரியர் க. வெள்ளை வாரணனர்,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.

## சாலச் சிறந்த தொண்டு

பதிப்புத்துறை மூலம் தமிழ்மொழிக்கும், நாட்டிற்கும், தமிழினத்திற்கும் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் ஆற்றிய தொண்டுகள் தமிழக வரலாற்றில் இடம் பெறத்தக்கவை. திரு. பிள்ளையவர்களின் தொண்டு அரசியலாரின் தொண்டுகளைவிடச் சாலச் சிறந்தது.

பேராசிரியர் ஏ. ஆர். மூத்தையன்,
சென்னை-23.

## அறிதற் கியலா அருந்தொண்டு

சுப்பையா பிள்ளை மறைந்ததைக் குறித்து வருந்துகிறேன். அவர்களுடைய சேவையின் மதிப்பை அறிய எல்லாராலும்

முடியாது. நேரில் இறுதி மரியாதை செலுத்த முடியாமைக்கு வருந்துகிறேன்.

கே. ஈசுவரன்,
தொழிற் செல்வர்—சென்னை.

## புகழ் நிலைக்கத்தான்போகிறது

தமிழ் வளர்ச்சிக்காகத் தம்முடைய முயற்சிகளை நெறிப் படுத்தி உயர்ந்த நோக்கத்தோடு வாழ்ந்த அவர்கள் இன்று நம்மிடையே இல்லை யென்றாலும் அவர்களுடைய புகழ் என்றும் நிலைத்து நிற்கத்தான் போகிறது.

பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு
துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## தமிழ்ப் பெரு வள்ளல் என்றே போற்ற வேண்டும்

பெரியவர் பிள்ளையவர்கள், நம் செந்தமிழ் வளர்ச்சிக்காகப் புரிந்துள்ள சீரிய தொண்டுகள் வரலாற்றில் பொன்னெழுத்து களில் பொறித்து வைக்கப்பட வேண்டியனவாகும். சங்க இலக் கியங்களிலிருந்து சமீப கால இலக்கியங்கள் வரை செம்மையாக நூல் வடிவில் தமிழர்களுக்கு வழங்கியுள்ள அவர்களைத் தமிழ்ப் பெரு வள்ளல் என்றே போற்றிப் புகழ வேண்டும்.

பேராசிரியர் நாரண-துரைக்கண்ணன்,
சென்னை-96.

## விடை காண முடியவில்லை

என்றென்றும் நிலைநின்று தமிழ் நூல் பதிப்புப் பணிபுரிய வல்ல இந்நூற் பதிப்புக் கழகத்தைப் போன்ற நிறுவனம் எது வேனும் உண்டா? என்னும் வினாவுக்கு என்றால் விடை காண முடியவில்லை. திரு. வ. சு. அவர்களின் பலதிற ஆற்றலும் புகழும் பல்லாண்டு வாழ்க! வளர்க!!

ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார்,
தமிழ் மணம், சென்னை-38.

## அவர்தம் சிந்தனைகள் செயல் படட்டும்

பதிப்புக் கலையில் அவர் இணையற்றவர், உயர்ந்த பண் பாளர்; நல்ல நண்பர் குழாம் அவரது செல்வம்; அப் பெரி யாரின் சிந்தனைகள் வருங்காலத்தில் செம்மையாகச் செயல்படும் என நம்புகிறேன்.

டாக்டர். நா. பாலுசாமி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

## ஆற்றல் போற்றி!

அறிஞரெல்லாம் புகழ்ந்தேத்த அயராது பெருந் தொண்டுகள் பல செய்து விளங்கிய என் மைத்துனர் வ. சுப்பையா பிள்ளை அவர்களின் இறையன்பு, சிவத்தொண்டு, தனித் தமிழ்த் தொண்டு ஆகியன அளப்பில. அவர் ஆற்றல் போற்றி !

மறை திருநாவுக்கரசு,
ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர், சென்னை.

## தமிழன்னை தன் வலக்கை இழந்தாள்!

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தை அதன் தொடக்க காலமுதல் நன்முறையில் வளர்த்து, மறைந்து போகக்கூடிய நிலையில் இருந்த பழந் தமிழ் நூல்கட்கெல்லாம் புத்துயிர் கொடுத்துக் காப்பாற்றியதன்றி ஏறத்தாழ ஆயிரத்து எழு நூற்று ஐம்பது நூல்களை வெளியிட்டவரும், அடியேனைக் கொண்டு சிலேடையகராதி முதலிய பல புதிய படைப்புக்களை உண்டாக்கியவரும் அடியேனுக்கு ஐம்பது ஆண்டுகட்குமேல் நண்பராக இருந்தவருமாகிய திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் மறைவு குறித்து அடியேன் கூறக்கூடிய செய்தி தமிழன்னை தன்னுடைய வலக்கையை இழந்தாள் என்பதே யாகும்.

சு. அ. இராமசாமிப் புலவர்.
கருப்பக்கிளர்.

## கணக்கிலடங்காத் தமிழ்த் தொண்டுகள்!

தமிழ் நூல்கள் அனைத்தையும் ஆங்கில நூல்களைப்போன்று கவர்ச்சியாகவும் அழகுபடவும் அச்சிட்டு வெளியிட்ட பெருமை பெரியவர் சுப்பையா அவர்களையே சாரும்.

பன்னிரு திருமுறைகளையும் சங்க நூல்களையும் அரிய பிற நூல்களையும் அனைவரும் விரும்பிப் படிக்கும் தோற்றமுள்ள நூல்களாக அல்லவா ஆக்கினர்!

இத்தகைய உயர்ந்த நூல்களை வாங்குபவர்கள் அவற்றைப் பாதுகாப்பாகப் போற்றி வைத்துக்கொள்ள அருமையான தேக்குமர பீரோக்கள் செய்தளித்த யூகத்தை எப்படியெல்லாம் போற்றுவது!

1938ஆம் ஆண்டில் இந்தி எதிர்ப்புப் போர் நடந்தபோது அவர் ஆற்றிய பணிகள் கொஞ்சமா? சிறை செல்லாவிடினும்

வெளியிலிருந்து எந்தெந்த வகையிலெல்லாம் தமிழ் உணர்வை மூட்டினர்!

தமிழ்ப் பெண்களும் ஆண்களும் வீர உணர்வோடு தோற்ற மளிக்க மூவேந்தரின் கொடிகள் பொறித்த சேலைகளையும் வேட்டி களையும் தயாரித்துக் குறைந்த விலைக்கு விற்றார். தமிழுக்காக, தமிழ்க் கலைக்காக அவர் ஆற்றிய தொண்டுகள் இன்னும் எத்தனை யெத்தனையோ, கணக்கில் அடங்கா.

டாக்டர். சிற்சபை,
காஞ்சிபுரம்.

## இயல்மொழி வளர்த்த ஏந்தல்

"யானொரு தமிழன் எனதொரு மொழியும்
தேனென இனிக்கும் தீந்தமிழ் மொழியே!"

என்பது தொடக்கமான பத்து மொழி உயிர் வரிகளை உருவாக்கி, அவற்றை காட்டிலே கடமாட விட்ட நம்பி திரு சுப்பையா பிள்ளை.

தமிழால் எல்லாம் முடியும் என்று அறைகூவல் விடத்தக்க அளவிற்குப் பல்வேறு துறைகளில் பாங்குறப் பைந்தமிழ் நூல் களைப் பதிப்பித்து, அதன் வாயிலாகத் தமிழ்மொழியின் வலு வினையும் பொலிவினையும், உலகறியச் செய்த ஒண்டமிழ்க் குரிசில் திரு. சுப்பையா பிள்ளை, அவர்களாவார்கள்.

அவர்கள் வளர்த்த தமிழ் இயற்கை மொழி. அந்த இயற்கையோடு இரண்டறக் கலந்துவிட்டார் ஏந்தல் சுப்பையா பிள்ளை.

டாக்டர். மெ. சுந்தரம்
தமிழ்த்துறைத் தலைவர் மாநிலக் கல்லூரி, சென்னை.

## உயிர் அமைதி பெறுக!

ஐயா அவர்களின் பிரிவினாலாகிய இழப்பு நமக்குமட்டு மன்று, நம் நாட்டிற்கும்' நம் மொழிக்கும், சமயத்திற்கும் நேர்ந்த பேரிழப்பாகும். தம் எண்ணமும் எழுச்சியுமெல்லாம் மொழி-நாடு-சமயம் என்பவற்றுக்காகவே வாழ்ந்த பெரியாரொருவர் நம் ஐயா அவர்களாவர். அவர்களின் உயிர் அமைதிபெற இறைவனை வணங்குகிறோம்.

கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ.,
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.



மலர்மாலை வைத்து இறுதி வணக்கம்
செலுத்துகிறார் அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன்



மலர்மாலை வைத்து இறுதி வணக்கம்
செலுத்துகிறார் பேராசிரியர்



மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் மாலைவைத்து
இறுதி வணக்கம் செலுத்துகிறார்



தாமரைச் செல்வரின் பருவுடலுக்கு மாலையணிவித்துக்
கலங்கி நிற்கிறார் நீதிபதி பு.ரா. கோகுலகிருட்டிணன்



நீதிபதிகள் இரத்தினவேல் பாண்டியன், மோகன் ஆகியோர்
மாலை வைத்து இறுதி வணக்கம் செலுத்துகிறார்கள்.



கழக ஆட்சியர் வ. சு. வின் பருவுடலுக்கு
டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள்
மாலை அணிவித்து வணங்குகிறார்,

# எப்போதும் தமிழுக்கே உழைக்கத் தக்கோன்

[புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்]

திருநெல்வே லிச்சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் போலும்
ஒருநல்ல தமிழ்வளர்க்கும் நிறுவனமும்
கண்டதில்லை உலகில்! அந்த
உரைமல்கு நிறுவனமும், முப்போதும்
தமிழுக்கே உழைக்கத் தக்க
பெருநல்லான் தமிழ்ப்புலவன் சுப்பையன்
போற்றிறரைப் பெற்றதில்லை.

நூலெல்லாம் விளையுமங்கே நூறுயி
ரக்கணக்கில்! நூல்ஒவ் வொன்றின்
மேலெல்லாம் அழகுசெயும் சுப்பையன்
மிகுதிறமை! அதுவு மன்றிக்
காலெல்லாம் சிலம்பொலிக்கத் தமிழரசி
உலகரங்கு காணும் வண்ணம்
தோலெல்லாம் சுளைப்பயன்கொள் புதுப்புதுநூல்
தோற்றுவிப்பான் அந்த மேலோன்.

---

## முதுமையைப் பொருட்படுத்தாத முயற்சியாளர்

திரு. பிள்ளையவர்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு ஆற்றியுள்ள பணி அபாரமானது. எப்போதும் இந்த கவனத்துடன் பணியாற்றி வந்தார். முதிய வயதிலும் அதைப் பொருட்படுத்தாமல் கடுமையாக உழைத்து வந்தார். கழகம் வெளியிட்டுள்ள நூல்கள் பிள்ளை அவர்களின் அபார சாதனையாகும்.

எம். பக்தவத்சலம்,
முன்னாள் முதல்வர், தமிழக அரசு.

## ஈடு இணையற்ற முயற்சியாளர்

பதிப்புத்துறையில் திரு. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு இணையாக யாரையும் சொல்ல இயலாது. எதிர்காலத்திலும் அவர் போன்றூர் தோன்றுதல் அரிது. மறைமலை அடிகள் நூலகம் அமைத்ததும், வள்ளலார் திருவருள் மண்டபம் நிறுவியதும் அவர் ஆற்றிய பணிகளில் தலையாயவை எனலாம். அவர் முழு வாழ்வு வாழ்ந்து மறைந்தார் என்ற அளவில் நாம் அமைதியுறுவோமாக.

எஸ். ஆர். வி. அரசு,
முன்னாள் இந்தியன் ஓவர்சீஸ் பாங்கு
பொது மேலாளர்

## நினைவில் நிறைந்தவர்

தமிழறிஞர்களுக்கும், தமிழகத்திலுள்ள நூலகர்களுக்கும் கழகம் என்றால் நினைவிற்கு வரக்கூடிய பெருந்தூண் சாய்ந்துவிட்டது. அவர்தம் தமிழ்த்தொண்டு மிகப் பெரிது.

மடங்களிலும், ஆதீனங்களிலும் தனிப்பட்டவர்களிடத்தும் சிறைப்பட்டுக் கிடந்த எண்ணற்ற தமிழ்ச் சுவடிகளை மக்கள் கைகளில் நூல்களாகத் தவழவிட்டவர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள். திரு. ஸ்டான்லி அன்வினைப் போலத் தமிழகத்தில் தனி ஒரு மனிதர் ஆயிரத்து எழுநூற்றைம்பதிற்கும் மேற்பட்ட அரிய நூல்களை வெளியிட்டு, தமிழுக்கு வளம் சேர்த்தவர்.

"தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதுண்டோ?" கழக வெளியீடுகளாக இனிக் காலம் காலமாகத் தமிழர்களின் கைகளிலும் மனங்களிலும் திருமிகு. வ. சுப்பையா பிள்ளை வாழ்வார்.

டாக்டர் பி. அ. மோகனராசன்,
நூலகர், சென்னைப் பல்கலைக்கழகம்.

## நீடூழி வாழவேண்டும்

அன்பிற்கும் நல்ல பண்பிற்கும் அயராத உழைப்பிற்கும் உறைவிடமாகத் திகழ்ந்தவர் திரு. சுப்பையா அவர்கள். அவர்களது தொண்டு நீடூழி வாழவேண்டும் என்பது என்னுடைய அவா.

எஸ். டி. காசிராஜன், இ. ஆ. ப.
இயக்குநர், செய்தி மக்கள் தொடர்புத்துறை, சென்னை

## துணையுண்டு, தொடரட்டும் பணி !

கழக ஆட்சியாளராக இருந்து அவர் செலுத்திய ஆட்சிப் பொறுப்பினை உரியவர்கள் ஏற்றுத் தளர்ச்சியில்லாமல் கழகத்தினை நடத்திச் செல்வதே மறைந்த பெரியாருக்கு நாம் செய்யும் நன்றி.

தமிழினம், தமிழ்மொழி வளர ஆவன எல்லாம் செய்யுங்கள். என்னைப் போன்ற தமிழ்த் தொண்டர்களின் துணை உண்டு.

பேராசிரியர் அன்பு கணபதி,
சென்னை-30.

## வ. சு. பிறந்திராவிட்டால்...

திரு. வ. சு. அவர்கள் தமிழகத்தில் பிறந்திருக்காவிட்டால் இவ்வளவு தமிழ் நூல்கள் கிடைத்திருக்குமா ?—மறைமலையடிகளார் புகழ் பரப்பும் வண்ணம் எழுச்சிமிக்க ஒரு நூல் நிலையம் ஏற்பட்டிருக்குமா ?... மறைமலையடிகளாரின் பெயர் இந்த அளவுக்காவது—தமிழக மக்களின் செவிகளில்—ஆட்சியாளர்களின் பார்வையில் — எட்டியிருக்குமா ? அல்லது தெரிந்திருக்குமா ? இவை தமிழன் ஒவ்வொருவனும் தன் மனச்சாட்சியினைக் கேட்கவேண்டிய கேள்விகள்.

டாக்டர் இரா. இளையநம்பி,
பழவந்தாங்கல்.

## தமிழகம் ஒரு தலைமகனை இழந்துவிட்டது

தமிழகம், ஒரே ஒரு பெரியவர் சுப்பையாவை இழக்கவில்லை; தமிழ்த்தொண்டுக்கே உடலெடுத்து உளம் எடுத்த ஒரு தலைமகனை - தகு மகனை இழந்துவிட்டது.

சாலை இளந்திரையன்.
தில்லிப் பல்கலைக் கழகம், புதுதில்லி.

## நினைவில் நிறுத்தத்தக்க தொண்டுகள்

பல்கலைக் கழகங்கள் பல, வெளியீடுகள் விற்பனையாகாமல் கிட்டங்கிகளில் கட்டி வைக்கப்பட்டுப் பொருள் இழப்பு அனுபவித்துச் சோர்ந்து நின்ற சமயத்தில் அவற்றைத் திறமையாக விற்று இலாபம் திரட்டிய பெருமை திரு. வ. சு. அவர்களைச் சாரும். மறைமலையடிகள் நூலகமளித்தது, தனித் தமிழுக்குச் சிறப்புத் தந்தது, தமிழ் அறிஞர்களை ஊக்குவித்தது; போன்ற பல அரிய தொண்டுகளைத் தமிழகம் பல ஆண்டுகள் நினைவில் நிறுத்திப் போற்றும்.

டாக்டர் வ. அய். சுப்பிரமணியம்,
துணை வேந்தர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.

## புகழுடல் ஓங்கி நிற்கும்

தமிழன் ஆக்கமும் தமிழின ஆக்கமும் நோக்கமாகக் கொண்டிருந்த சுப்பையா என்னும் செயலுருவம் பருவுடலிலிருந்து விடுபட்டதாயினும் கழகப் பணிகள், படைப்புகளில் நுண்புகழ் வடிவில் ஓங்கி நிறைந்திருப்பதை நாடு அறியும்.

புலவர் தி. நா. அறிவுஒளி, க.மு.,கல்.இ.
திருக்கழுக்குன்றம்.

மற்றும்,

கீழ்க்காணும் பெருமக்களிடமிருந்தும் கழக ஆட்சியர் மறைவு குறித்து இரங்கல் செய்திகள் வந்துள்ளன :

தமிழிசைச் செவ்வேள், பொ. மாணிக்க வாசகம், திருச்சிராப்பள்ளி; பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம், சென்னை; பேராசிரியர் அன்பு கணபதி, சென்னை; ம. ப. பெரியசாமித் தூரன், சென்னை; ச. தமிழவேள், மன்னார்குடி; டாக்டர் எஸ். இன்னாசி, பாளையங்கோட்டை; ஆ. சுவாமிநாதன், திருநகர்; வை. முரு. முத்துக்குமாரசாமி, வேதாரணியம்; பி. வி. கிரி, நிருபர் 'தமிழரசு' சென்னை; கா. சங்கரனார், திருநெல்வேலி; மு. அருணாசலம், திருச்சிற்றம்பலம்; இ. சு. முத்துசாமி, இராமநாதபுரம்; மா. சண்முக சுப்பிரமணியம், தஞ்சைப் பல்கலைக் கழகம், தஞ்சை; திருமதி த. காந்திமதி லட்சுமி, எம். ஏ. ஏ. பி. சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி; ஆபிரகாம் அருளப்பன், தமிழ்ப் பேராசிரியர், பாளையங்கோட்டை ; புலவர் ச. கண்ணபிரான், எம். ஏ., பி. எல்., திருநெல்வேலி; சோ. ஆறுமுகசுந்தரம், வள்ளியூர்; மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின் பேத்தியர் திருமதி அழகம்மாள், திருமதி அன்புமணி; தெ. கணபதியப்பன்;

ஆ. சிவராமகிருஷ்ணன், திருவள்ளுவர் கழகம் தென்காசி. செ. வைத்தியலிங்கம், எம். ஏ., எம. லிட். தமிழ்ப் பேருரையாளர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம், அண்ணுமலை நகர்; ந. சீனிவாசன், சிதம்பரனுர் நூல் நிலையம், அச்சாகா நகர், பெங்களூர்; என். செங்கல்வராயன், பி.ஏ., நூலகர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை; தி. வி. சபாபதி, பி.இ., திருநெல்வேலி: ச. சுந்தரராசன், தாசில்தார், திருநெல்வேலி; கா. இராமலிங்க தேசிகர், திருநெல்வேலி; ம. இலக்குமி நாராயணன, தமிழ்ப்பேராசிரியர், தேசிய கல்லூரி, திருச்சி; தெசிணி, ஆசிரியர் 'கவிதை' சென்னை; திருமதி துரை மங்கையர்க்கரசி; மயிலை; சித்தாந்தத் தென்றல், டாக்டர், புலவர், அ.மு. சுந்தரவிநாயகன், திருநெல்வேலி; A.N. Arora, Asian Educational Services, New Delhi; டாக்டர் பொற்கோ, சென்னை; மு.வை. அரவிந்தன், தமிழ்த் துணைப் பேராசிரியர், அரசு கலைக்கல்லூரி, கிருஷ்ணகிரி; உ. அஞ்சனம் அழகிய பிள்ளை, எம்.எசி., இணைப் பேராசிரியர், வட்டார ஆராய்ச்சி நிலையம், தமிழ் நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், அருப்புக்கோட்டை; ம. இலககுவன், தமிழப் பேராசிரியர், அரசினர் கலைக்கல்லூரி, விழுப்புரம்; டாக்டர். சரளா இராசகோபாலன், தமிழ்த் துணைப் பேராசிரியர், ராணிமேரிக் கல்லூரி, சென்னை; ப. இலக்குமணன், திருநெல்வேலி; க. வ. முதலையா, சிந்து பூந்துறை; டாக்டர் கு. பத்மநாபன், தமிழ்ப்பேராசிரியர், எஸ். ஐ. வி. டி. கல்லூரி, சென்னை; டாக்டர் இரா. குருநாதன், விவேகாநந்தர் கல்லூரி, சென்னை; வேலூர் ம. நாராயணன்; டாக்டர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்) தமிழ்த்துறைத் தலைவர், அரசு ஆடவர் கல்லூரி, கும்பகோணம்; தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு) பொள்ளாச்சி; பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், தில்லைநகர், திருச்சி; செயலாளர், திருவள்ளுவர் மன்றம், கோயிற்பட்டி; டாக்டர் சொ. சிங்காரவேலன், பேராசிரியர் ஏ. வி. சி. கல்லூரி, மயிலாடுதுறை; நெல்லை ந. சொக்கலிங்கம், மதுரை; டாக்டர் இ. ஜி. பாஸ்கரதாஸ், பி. எஸ். ஜி. கல்லூரி, கோவை; பேராசிரியர் மு. அப்துல் கரீம், அதிராம்பட்டணம்; கு. நம்பி ஆரூரன், தமிழ்ப் பல்கலைக் கழகம், 'தஞ்சாவூர். பேராசிரியர் சுந்தர சண்முகனுர், தமிழப் பல்கலைக் கழகம, தஞ்சாவூர்; ப. சோதிமுத்து, மதுரை; இரகுபதி சாமிநாதன், பாரதி புத்தக நிலையம், மதுரை; பேராசிரியர் நயினுர் முகம்மது, திருச்சி; T. V. சங்கர குமாரு, நெல்லை; பேரா. வே. இராம சுப்பரமணியம், திருச்சி; பேரா. கொண்டல் சு. மகாதேவன், கோவை; முருக, விசாக நம்பி, நங்கநல்லூர், சென்னை; எஸ். வி. சுப்பிரமணியம், நங்கநல்லூர்; ஆ. செயராமன்,

வெள்ளிமேடுபேட்டை; டாக்டர் ஆறு அழகப்பன், சென்னை; ஜெ. பிரசாத் டேவிஸ் செயலர், தென்னிந்திய வணிகம், தொழில் கழகம்; செல்வகுமார், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு, கடைய நல்லூர்; ஜி. வி. கிருஷ்ணசாமி, கோவை; தி. நா. அறிவு ஒளி, க. மு. கல். இ. திருக்கழுக்குன்றம்; பேரா. அ. மு. பரமசிவானந்தம் சென்னை; தணிகை உலகநாதன், மாணவர் மன்றம், சென்னை; பேரா. மு. சண்முகம் பிள்ளை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்; புலவர் சி. ஞானமணி, சென்னை; பன்மொழிப் புலவர் மு. சதாசிவம், ஈரோடு; எஸ். பி. சுப்பையா பாரதி, தமிழாசிரியர், நெல்லை; பேரா. பி. முத்தையன், சீ வைகுந்தம்; டாக்டர். இரா. கலைக்கோவன், எம்.பி.பி.,எஸ்., டி.ஒ., திருச்சி; சி. சு. மணி, பி.ஏ., பாளையங்கோட்டை; சேதுராமலிங்கம், நெல்லை; டாக்டர் கு. பரமசிவம், மதுரை; டாக்டர் ஏ. என். பெருமாள், சென்னை; ஆர். சீனிவாசன், பி. இ., நெய்வேலி; டி.வி.எஸ் மணி, சென்னை; மணிவாசகர் மன்றம், அரியலூர்; சி. எஸ். கண்ணபிரம், கோவை; புலவர் வை தங்கமணி, திருமங்கலம்; ஆ. பழனி, தமிழாசிரியர், திருப்பரங்குன்றம்; மா. முத்து, ஓவியர் 'தமிழரசு' சென்னை; இளமுருகு பொற்செல்வி, சென்னை; கே. ஏ. இராசன், தட்டான்குளம்; கேரளம்; இரா திருநாவுக்கரசு, செயலர், சைவ வேளாளர் பேரவை, திருச்சி; தி. சு. அவிநாசிலிங்கம், கோவை; பேராசிரியர், வி. பெருமாள், கோலார் தங்கவயல்; சு. திருநாவுக்கரசுப் பிள்ளை, கொற்கை; கே டி. கிருட்டினமராஜு, கும்பகோணம்; பாவலர் தமிழ்க்குமரன், ஈரோடு; புலவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன், ஆலந்தூர் சென்னை-16; பேராசிரியர், கோ. இராமச்சந்திரன், தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை; பேராசிரியர், ச. திருஞானசம்பந்தம், அண்ணாமலை நகர்; ப. தண்டபாணி, சென்னை-4; வி. நடராஜன், பாளையங்கோட்டை; எம். ஆறுமுகம், தலைமை ஆசிரியர், நடுநிலைப்பள்ளி, இராசபாளையம்; எம். ஜி. ஜகந்நாதராஜா, ராஜபாளையம்; சி. பத்மநாப சுவாமி, சென்னை-2; இராம. அரங்கண்ணல், சென்னை-18; எமரால்டு பதிப்பகத்தார், சென்னை-2; முனைவர் ம. ரா. போ. குருசாமி. முதல்வர், சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, கோவை; வி. கோபாலகிருட்டிணன், சிங்கப்பூர்; ஜி சி. இளங்கோ, திருப்பனந்தாள்; எம். சண்முகநாதன், பெங்களூர்; செ. இலக்குமி நாராயணன், மதுரை; தி. கலசலிங்கம், சென்னை-18; சங்கரவள்ளிநாயகம், தமிழ்த்துறைத் தலைவர், கோ. பெ. நா. கல்லூரி, கோயிற்பட்டி; மற்றும் பலர் பெயர்கள் அடுத்த இதழிலும் இடம்பெறும்.

———

# பாமாலைகள்

## எந்தநாள் காண்போம் இனி

செந்தமிழ் நூல்பலவும் சீராய்ப் பதிப்பித்த
அந்தண்சுப் பையாவாம் அண்ணலே—சுந்தரனும்
கந்தனடி சேர்ந்தாய் கலைமலிந்த நின்முகத்தை
எந்நாள் காண்போம் இனி.

— திருமுருக கிருபானந்தவாரியார்,
சென்னை.

## எந்தவா றமைதி கொள்ளும்?

செந்தமிழ்ச் செல்வி மூலம்
செய்ததொண் டதுவு மன்றிச்
செந்தமிழ் நூல்ப தித்தும்
செந்தமிழத் தொண்டாற் றிப்பேர்

வந்தசுப் பையா பிள்ளை
வானுல கானார் ஐயோ
எந்தவா றமைதி கொள்ளும்
இத்தமி ழுலகு மாதோ.

— பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை, 113.

## சிந்தை மிக நொந்தேன்

அல்லார் பலரிருக்க அன்பின் உருவாய
நல்லாய் நினைக்கொள் நமனைநான்—பொல்லாத
அந்தகன் என்னில் அமையும் உனையிழந்து
சிந்தைமிக நொந்தேன் திகைத்து.

—மு. ரா. பெருமாள் முதலியார்,
சென்னை.

## நின்பெருமை சொல்லுற்றுல் நீளும்

தண்டபா ணிப்பெரியோன் சாற்றுபல நூற்கருத்தை
மண்டலத்தோர் கொள்ள வகைசெய்தாய்-தொண்டுசெயும்
நின்பெருமை சொல்லலுற்றுல் நீளும் எளியேன்யான்
சொன்னாலும் நாவலிக்கும் தூயவனே—நின்னுறவை
கொண்டவிரும் யாங்கள் குலவுமனை மக்கள் நண்பர்
விண்ட இருமருகர் மேன்மேலும்—மண்டுலகம்

பெற்றுவக்க நீயருள்வாய் பீடுமலி ஈசனடி
உற்றவிர்வின் ஆன்மா உயர்சாந்தி—பெற்றிடுக
என்றுரைத்தே பேசினேம் எங்களுக்கெந் நாளும்நீ
மன்னுநலம் செய்வாய் மகிழ்ந்து.

—புலவர் தி, மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர், திருவாமாத்தூர்.

## மாண்பறிவார் யாரினி அம்மா

அத்தானும் சுப்பையப்பேர் அண்ணல் தமிழ்ப்பற்றை
இத்தா ரணியையும்விட் டிந்திரன்பால்—கத்தார்வச்
செந்தமிழின் மாண்பைத் தெரிவிக்கச் சென்றனரோ
எந்நாள் காண்போம் இனி.

தமிழே தன் மூச்சாய்த் தமிழே உயிராய்த்
தமிழே எதிலும் தழைத்துத்—தமிழேற்றம்
காண்பதுவே நாடும் கவின்றமிழ்ச்சுப் பையாகன்
மாண்பறிவார் யாரினியம் மா.

ஆட்சித் திறமை அன்புதவழ் நற்பேச்சு
காட்சிக் கெளிமை கவின்பதிப்பு—மாட்சிமையை
உள்ளிக் கருதிச்செய் ஊக்கம் உலையா முயற்சித்
தெள்ளிமைசுப் பையாவின் சீர்

—தி. செ. முருகதாச சுவாமிகள்,
திருவாமாத்தூர்.

## சிவப்பேரொளியில் தேங்குக!

மண்டிணி ஞாலத் தெண்டிசைக் கண்ணும்
எவரே தமிழொளி மேவுறப் புரிவார்?
மாத்தமிழ்ப்,
பகைவர் கொடுஞ் செயல் தகைவார் யாவர்?
தமிழும் சிவமும் தழையத் தழைந்த
சுப்பை யாவெனும் ஒப்பில் பேரொளி
சிவப்பே ரொளியில் தேங்குக! அன்னார்
விளைத்த தமிழ்ப்பணி மீத்தமிழ் ஞாலம்
நின்று நிலவுக! நீடிசை
மேவுக! உலகெலாம் மேவுக! நெடிதே!

—புலவர் பா. நாராயணன்,
ஆத்தூர், சேலம்.

## வெளியீட்டுத்துறை வேந்தே!

வழக்கொழிந்த இந்திவட மொழிகள் செய்த
வல்லாண்மை இழிவுகளைத் தகர்த்தெறிந்தீர்!
புழக்கத்தில் கொண்டுவரும் குறிக்கோளோடு
புதுப்புதுச் சொல் ஆய்ந்தறிந்து நூல்கள் தம்மில்
அழியாமல் இடம்பெறவே செய்தீர்! உங்கள்
அருந்தொண்டோ இமயம்போல் சிறந்த தாகும்
விழிப்புணர்வை உண்டாக்கிப் புதுமை சேர்த்த
வெளியீட்டுத் துறைவேந்தே! நும்பேர் வாழ்க!

—கடவூர் மணிமாறன், க. மு.

## மறைந்தனையோ? இல்லை! இல்லை!

நடமாடும் பல்கலையே! நற்றமிழின் தேனீயே!
நாட்டி லுள்ள
குடமான தேன்புலவர் குறிக்கொண்ட அறிவெல்லாம்
குடைந்தே வூதிப்
படமாக நூல்வரையப் பணித்திட்ட பண்பாளா!
தமிழின் நூல்கள்
அடையாகப் பதிப்பித்தாய் ஆருயிரை எங்கேநீ
பதித்தாய்? அந்தோ!
பிறநாட்டார் நூல்கள்வரை பிறந்த மண்ணில் புதுநூல்கள்
சமய நூல்கள்
அறநூல்கள் வகைவகையாய் அடுக்கிவைத்துச் சுவைகாண
அள்ளித் தந்த
சிறகெங்கே? அதன்வலிமை எங்கேநீ மறைந்தனையோ
இல்லை! இல்லை!
புறநாட்டுச் சுவையறிஞர் நெஞ்செல்லாம் புகுந்தினித்த
சுப்பையாவே!

—புலவர் அடியன் மணிவாசகன்,
திருவைகுர்தம்.

## என் சொல்லி ஆற்றிடுவோம்

புலவர்தம் புரவலனைப் புகழார்ந்த தமிழ்மகனை
இலகுதமிழ் வளர்ப்பவனை இரையாக்கிக் கொண்டாயே
கூற்றுவனே உனைக்கொல்லும் கூற்றுவனும் இலையென்ற
சாற்றரிய செருக்கதனால் சஞ்சலத்தைத் தருகின்றாய்
உன்பசிக்கே யென் னுயிரை ஒருவார்த்தை கேட்டிருந்தால்
புன்முறுவல் முகத்தோடே பூசித்துத் தந்திருப்பேன்

தமிழ்காக்கும் தந்தையினைத் தத்தெடுத்தே நும்நாட்டில்
தமிழ்நூல்கள் பதிப்பிக்கத் திட்டமிட்டே செய்தனையோ
காலந்தான் அவர்குடும்பக் கண்ணீரைத் துடைத்திடலாம்
காலமாய் ஆனஅவர் காத்திடுவார் தம்புகழால்
சுப்பையா பிள்ளை அவர்
இப்புவியில் புகழுடம்பில் என்றென்றும் வாழ்ந்திருப்பார்!

—கவிதை மணி. மயிலை முத்தெழிலன்,
சென்னை.

## நெஞ்சைச் சுட்ட தந்தோ!

தப்பையா நூலெல்லாம்
தாங்ககிலேம் என்றறிஞர்
தவித்த நாளில்

வைப்பையா இக்கழகம்
வளர்தமிழுக் கென்றுமொழி
வளர்க்க வந்த

சுப்பையா போயினை நீ
என்னுமொரு சொல் நெஞ்சைச்
சுட்ட தந்தோ!

எப்பையா நினக்கு நிகர்
ஒரு மகனைத் தமிழன்னை
ஈன்றெடுப்பாள்?

—புலவர் ஆ. பழநி,
காரைக்குடி.

## தெள்ளுதமிழ்ப் பிள்ளை

சித்தாந்த நூற்பதிப்புக் கழகங் காணின்
சீலமிகு சுப்பையா நினைவு தோன்றும்!
வித்தகர்கள் வியப்பெய்தப் பதித்தார் நூல்கள்!
விழியாக மொழிசமயம் தழுவி வாழ்ந்தார்!
எத்துணையும் மடிமையிலார் அவரை யாங்கள்
எள்ளறுசீர் தெள்ளுதமிழ்ப் பிள்ளை என்பேம்!
சித்தத்தைத் தனித்தமிழ்க்கே வைத்த வீரர்!
திரும்பியிவண் வருவாரோ? உரைப்பாய் நெஞ்சே!

—டாக்டர். நெல்லை. க. சுப்பிரமணியன்,
தூயயோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.

## எவரே இவர்க்கிணை ?

செந்தமிழ் வளர்த்தலிற் சீர்மை சான்றவர்
பைந்தமிழ்ப் புலவர்தம் உள்ளம் தேர்ந்தவர்
எந்தையும் தாயுமாய் இயைந்து வாழ்ந்தவர்
முந்தையர் நெறியினில் தமிழை வென்றவர்!

தமிழ்வளர்த் தவர்க்கெலாம் தலைமை சான்றவர்
அமிழ்துறு பேச்சினல் அறங்கள் காத்தவர்
தமிழ்வளர்ப் பதிலினி எவரே இவர்க்கிணை ?
தமிழெனும் மொழிவளர் தொண்டும் தளர்ந்ததே!|

—நாஞ்சில், கா. கணபதி.

## மெய்ப்பொருளானர்

இந்நிலத்து நடப்புகள் எவைஎன்றே
கேட்பதற்காய் இயக்கி வைத்த
பண்ணில்லா வானெலிஓர் பதைபதைப்புச்
செய்தியினைப் பகர்ந்த தம்மா!
எந்நிலத்தும் நிகரில்லா இனியதமிழ்ப்
பணிசெய்த எந்தை! இந்த
மண்ணுலகில் கழகத்தை மாண்புறவே
வளர்த்தமைத்து மாய்வை வென்ருர்!

அருந்தமிழைப் பேணியநம் ஆற்றலுடைத்
தமிழ்க்குரிசில் ஆட்சி யாளர்
திருநிறைந்த சைவத்தைத் திகழவைத்த
சிவச்செல்வர் தென்றல் பண்பர்
பெருமைமிகு பொதியமலை பிறங்குகின்ற
பாண்டிநாட்டில் பிறந்த செம்மல்
முருகுடைய தமிழ்மொழியை முனைப்போடு
வளர்த்தஅண்ணல் முடிவை வென்ருர்!

விரிந்தியங்கும் புடவியே! வியப்புமிக்க
பேரண்ட வித்தே! முத்தே!
அறிந்துணர இயங்குகின்ற ஐம்பூத
மெய்ப்பொருளே! ஆக்க அன்பால்
பரிவுடனே தமிழ்அமிழ்தைப் பயனுறவே
யாவர்க்கும் பாங்காய்த் தந்த
பிரியமுள்ள எந்தையை, பெருந்திறன்கொள்
தந்தையைப் பேணு வாயே!

கழகத்தால் எண்ணில் கவின்பணிகள் செய்தே
அழகுடைய நல்வாழ் வருளி - உழுவலன்பால்
பொய்ப்பொருள் ஓட்டும் பொலிதமிழ் பேணியே
மெய்ப்பொருள் ஆனார் மிளிர்ந்து.

— பொன் முனியப்பன், எம். ஏ.,
கூவலூர்.

## சிவனே, அருள்வாய்!

உலகம் போற்ற உயர்தமி ழதனை
நிலவச் செய்த நீள்புகழ் ஐயா?
திருவ ரங்கரின் உடன்பிறப் பண்ணல்!
ஈரா யிரமாம் இனியநல் லாண்டும்
ஈரா யிரத்து இன்னூல் பிறப்பும்
இனிதே காண்பீர் என்றே நினைத்தேன்
நினைத்த நினைப்பது நீர்கன வாக
மாண்புறு தேவ நேயத் தமிழ்வேள்
பண்ணாய் வித்தகர் குடந்தைச் சுந்தரர்
வண்ணக் கவிஞர் கண்ண தாசன்
உலகத் தமிழ்மா நாடு கண்ட
உயர்தனிப் புலவர் ஒருசிலர் மறைய
நந்தமிழ் நாடு நலிவுறக் கண்டே
நுந்தமிழ் உள்ளம் நொந்திட அந்தோ!
நல்லார் பெரியார் அண்ணா வாழும்
நாட்டினை நாடிச் சென்றனை யோகொல்'
ஏந்தலே உமைப்போல் இனியெவர் வருவார்!
தென்னா டுடைய சிவனே! அவரை
இந்நா டதனில் பிறந்திட அருள்வாய்!

— நல்லாசிரியர், புலவர் இர. திருஞானசம்பந்தன்,
தாடண்டர் நகர், சைதாப்பேட்டை.

## தாமரைச் செல்வர் அவர்களே,

புள்ளியைப்
பூமண்டலமாக்கும் ஆற்றல்
தங்கள் வரலாறு

ஈரத்தின் புதிய இதழ்
வீரத்தின் புத்தம் புதிய பதிப்பு
தங்கள் வாழ்க்கை

நினைவுகளைப் பதிப்பித்த தாங்கள்
இன்று
பதிப்பின் நினைவாக மாறிவிட்டீர்களே
கழகத்தை நிலையாக்கிச்
செந்தமிழைச் செல்வியாக்கிய
தாமரைச் செல்வரே,
தங்களிடம்
சொல்லித் தெரிந்தன பல
சொல்லாமல் தெரிந்தன பற்பல
எத்தனை எத்தனையோ
கற்றுத் தந்தீர்கள்
கற்றுக் கொண்டோம்
ஆனால் ...
தங்களைப் பிரிந்து தவிக்கும்
தவிப்பைத்
தாங்கிக்கொள்ள மட்டும்
கற்றுத்தர வில்லையே!

— பேராசிரியர். தி. வ. காந்திமதிநாதன்,
பி.ஏ., (ஆனர்சு) எம். ஃபில்
தமிழ்த் துறைத் தலைவர், ஏ. வி. சி. கல்லூரி, மயிலாடுதுறை.

## தமிழன்னைக் கிழப்பே,

தாமரைச் செல்வர் சைவசித் தாந்த
நூற்பதிப் புக்கழ கத்தின்
சேமஆட் சியர்மற் றப்பரச் சகத்தின்
சிறந்தமே லாளர்செந் தமிழின்
காமநற் கருத்தர் திருநெல்வே லியர்மெய்
கண்டபக் தியர்கட வுளர்பால்
தாமமார் சுப்பை யாப்பிள்ளை மறைவு
நாமகள் தமிழன்னைக் கிழப்பே.

—சாதுராம் சாமிகள்,
மேலமங்கலம் (தங்கல்)

## சுப்பையவேள் புகழ் வாழ்க!

தனித்தமிழ்த் தந்தை மறைமலை யடிகள்
தம்வழி தன்னையே காத்தும்
கனித்தமிழ் நூல்கள் யாவரும் கற்கக்
கவினுறு பதிப்பகம் வளர்த்தும்

மனித்தர்தம் அறிவை வளர்த்திடச் சிறந்த
மறைமலை நூலகம் எடுத்தும்
இனித்தநற் பணிகள் பலப்பல புரிந்த
சுப்பைய வேள்புகழ் வாழ்க.

—புலவர் சோ. முருகேசனர்,
சென்னை.

## எண்ணியதை முடிக்கும் திண்ணியரே!

இடமகன்ற தமிழ் நாட்டில் வடமொழியின் வல்லாண்மைக்
கிடமில்லை எனச்செய்து இனமானம் காத்திட்ட
ஈடில்லா நும்பணியை எண்ணுங்கால் என்முன்னே
ஈரோட்டுப் பெரியாரை எந்நாளும் காண்கின்றேன்
சீரியநற் றமிழ்காக்கும் சிந்தனையில் வாழ்ந்தாலும்
ஆரியத்தின் மயக்கொழிக்கும் காரியத்தில் கண்வைத்தே
அரியபணி ஆற்றுவதில் அண்ணுவுக் கொப்பானீர்
வடமொழியை முடமாக்கி வண்டமிழைக் காப்பதிலே
வழிகாட்டும் மறைமலையாய் விழிகாட்டி நின்றிட்டீர்
வ. சு. எனவுந்தன் மாசில்புகழ் நிலைக்கும் வண்ணம்
வள்ளுவத்தைப் பரப்புதற்கு வகைவகையாய் நூல்செய்தே
எள்ளுதற்கு இடமின்றி இயற்றமிழ்நூல் பலகொணர்ந்தீர்
எண்ணியதை முடிப்பதற்கு ஏற்றதொரு பதிப்பகத்தைக்
கண்ணியமாய் நடத்திவந்து காலத்தை வென்றஉமைக்
காலந்தான் வென்ற தந்தோ!
ஞாலத்தில் நும்புகழும் சாலச் சிறந்திடுமே.

—நாகை. த. சி. வேலன்,
சென்னை.

## நாடு மறவாது நாம் மறவோம் என்றென்றும்!

பாவாணர் ஆய்வென்றுல் தேவமிழ்தம் தமிழுக்கு,
பரப்புவேன் அச்சிட்டு விற்குமோ விற்காதோ
தேவையிது தேவையிது செந்தமிழர் செல்வமிது
தாழாதே செய்வனெனச் சூளேற்ற சுப்பையா
சாவாமல் தமிழ் காத்தார் சாம்பலிலும் சிவமானர்
உள்ளம் தமிழ்க் கீந்தார் உயிர்மட்டும் சிவம்சேர
நாவாரத் தேவாரம் பாடிவிண் சென்றிட்டார்
நாட்டுமின் நடுகல்லை; சூட்டுமின் புகழ்மாலை.

—பேராசிரியர் இரா. மதிவாணன்,
சென்னை.

# தாமரைச் செல்வர் போற்றி

பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம், சென்னை-1.

சிவத்தொண்டும் தமிழ்ப்பணியும் கண்ணாய்க் கொண்டு
திருவாளர் சுப்பையா கழகம் கண்டு
நவநவமாய்ப் புதுநூல்கள் பதிப்பித் திந்த
ஞானிலமே கொண்டாடும் தலைமை யுற்றார்
அவமாக ஒருபொழுதும் ஆக்கா தன்னார்
அயராமல் இறுதிவரை ஆட்சி செய்தார்
தவஞ்செய்து தமிழ்த்தாயே ஈன்ற ளித்த
தகைமைக்குச் சான்றாகச் சான்றோ ரானார்.

ஆயிரத்தோ டெழுநூற்றின் மேலாம் நூல்கள்
அய்யாவின் தனியுழைப்பால் தமிழ்த்தாய் பெற்றாள்
கோயிலென ஆய்வாளர் மதித்துப் போற்றும்
குறைவில்லா மறைமலையார் நூல கத்தைத்
தாயினைப்போல் காப்பாற்றி வளர்த்த அய்யா
தமிழுக்கும் சிவத்துக்கும் காப்பே ஆனார்.
பாயிரமாய் அவர்பெருமை சாற்று தற்குப்
பாருலகில் பலநிலையம் நிலையாய் நிற்கும்.

ஆட்சிமொழி தமிழாக முதல்மா நாட்டை
அந்நாளில் சென்னையிலே நடத்தி வைத்தார்
காட்சிக்கும் கருத்துக்கும் விருந்தே யாகக்
கணக்கற்ற தமிழ்நூல்கள் விழாவெ டுத்தார்
மாட்சிமையைக் கருவினிலே கொண்ட அய்யா
மனமொழிமெய் மூன்றாலும் தமிழ்வ ளர்த்தார்
சாட்சிசொலக் கழகத்தின் சார்பா யுள்ள
அமைப்புகளே என்றென்றும் நம்முன் நிற்கும்.

குறள் பரப்பும் பணியொன்றே முதலாய்க் கொண்டார்
கோடிநலம் தமிழ்பெறவே பாடு பட்டார்
உறவுக்கும் கழகம்தான் உரைகல் என்றார்
ஒழுங்கான ஒழுக்கம்தான் வேண்டும் என்றார்
திறமெங்கே இருந்தாலும் தேடிச் சென்று
சிறப்பளித்துப் பொதுவாக்கி உயர்வ ளித்தார்
மறவாது தமிழப்புலவர் பலரைப் போற்றி
மாண்புபெற வைத்துலகம் மதிக்க வைத்தார்.

எழிலொழுகும் பேழைகளில் இணக்க மான
இன்தமிழ்நூல் வரிசையினை எண்ணிச் சேர்த்து
வழிவழியே யாவர்க்கும் பயன்கள் சேர
வகைசெய்த பெருமகனர் இவரே யாவார்
அழிவில்லா நூல்வாழ்வு தமிழ்த்தாய் பெற்ருள்;
அருகாத பெரும்புகழை அய்யா பெற்ருர்
பழிநீக்கி மொழிகாத்துப் பழமை போற்றிப்
பகுத்தறிந்து புதுமையினை வளர்த்தார் அய்யா !

பதவிகளில் இருக்கின்ற மனித ரேனும்
பட்டங்கள் பலபெற்ற அறிஞ ரேனும்
இதமாகக் கழகத்தின் சேவை பற்றி
எடுத்துரைத்துப் பொதுநன்மை வேண்ட லன்றி
உதவியெனத் தமக்காக ஒன்றும் கேளார்;
உயிர்மூச்சே கழகமென ஆக்கிக் கொண்டு
பதமாக எண்பத்தா ருண்டு வாழ்ந்த
பண்பாளர் அய்யாவின் பணிகள் வெல்க !

எப்பணிகள் எவராலே முடிதல் கூடும்
என்பதனை ஆய்ந்தாய்ந்து முடிவு செய்வார்
தப்பிதமாய் அவர்எண்ணம் முடிந்த தில்லை;
தடைவரினும் தளராது வெற்றி காண்பார்
வெப்பத்துப் பனிபோல இடர்கள் தீர்த்து
வீறுகொளக் கழகத்தை விளங்க வைத்தார்
ஒப்புக்கும் பழகாத உண்மை உள்ளம்
உடையவரை, அய்யாவை என்று காண்போம் ?

மறைமலையார் புகழ்காத்த அய்யா போற்றி
மாத்தமிழ்நூற் காவலராம் செம்மல் போற்றி
நிறையறிவு நெடிலைபுகழ் நிமலர் போற்றி
நெஞ்சுகவர் கழகவழி நிலைத்தார் போற்றி
மறையாகும் குறள்பரப்பி மகிழ்ந்தார் போற்றி
மாண்புடையார் மதிக்கின்ற மன்னர் போற்றி
இறைமைநலம் இயல்பாகக் கொண்டார் போற்றி
எம்மருமைச் சுப்பையா போற்றி போற்றி.

## எத்தனையோ நற்பணிகள் செய்த வித்தகர்

அன்பர்சைவ சித்தாந்த ஆர்ந்தநூ லைப்பதிக்கும்
இன்பக் கழகத் தினிதாட்சி—நன்முறையில்
செய்துவந்த தாமரைச் செல்வனர் சுப்பையா
எய்தினர்நல் ஈசன்இடத் தே.

எத்தனையோ நற்பணிகள் ஏற்றமுறச் செய்துவந்த
வித்தகராம் சுப்பையா மேலவர்தாம்—இத்தரையில்
அச்சிட் டளித்த அரிய திருநூல்கள்
மெச்சியறி வார்புவியின் மேல்.

—தவத்திரு சுந்தரசுவாமிகள், கோவை.

## இரங்கி நிற்கின்றேன்

தமிழை வளர்த்த தனித்திரு வாளர்
உவமை காணு உழைப்புச் செம்மல்
எத்தனைச் சுவடிகள் எத்தனைத் துறைகளில்
எத்தனை இன்னிய புத்தகக் குவைகள்
எனது திருக்குறள் இருமொழி களிலும்
சிலம்புச் செல்வம், திருக்குற ளின்பம்
நிலம்புகழ் 'கிரான்ட் எபிக்' நீள்'சிவ லீலா'
கவின்பெற உலகம் களித்திடத் தந்தார்
சிவம்பெறத் திகழ்ந்த தீந்தமிழ்ச் சைவர்
"அடிகள் வருகென அன்புடன் ஏற்றுப்
படிகள் அளித்துப் பாராட் டொருவர்
தனித்தவத் திருந்து தந்தநன் னூல்களை
உலகம் உவக்க உதவிய அண்ணல்
தாமரைச் செல்வர் சாவையும் வென்று
புகழுட லுடனே பொலிக! பொலிகவே!
சோழ புரத்திலே தூய்தவக் குடிலில்
ஆழ நிட்டையில் அமர்ந்துளேன் அன்பீர்
இனியும் நீவிர் எனது நூல்களைக்
கனிவுறப் போற்றிக் கண்ணகம் இன்புற
வெளியிட் டுதவ வேண்டிநிற் கின்றேன்.
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கவே!

கவியோகி சுத்தானந்த பாரதியார்,
சோழபுரம், சிவகங்கை.

## ஆவியாகிச் சூழ்வருமோ?

மூத்து முதிர்ந்தெண் பத்தாரும் ஆண்டே யெனினும் முன்னின்று
காத்த தமிழும் நூற்பதிப்புக் கழகந் தாமுங் கலங்காவா?
வாத்த கலைகள் தமிழாக இயங்க முயன்ற யாவுமினி
ஆர்த்த தமிழர் சுப்பையா ஆவி யாகிச் சூழ்வருமோ?

வேலா இராசமாணிக்கம்,
ஆசிரியர், 'குறளியம்,' ஈரோடு.

## மனத்திட்ப மதிவல்லோர்!

வினைத்திட்பம் எனுஞ்சொல்லின் மெய்வடிவாய்
இலக்கியமாய் விளங்கித் தொண்டில்
தினைத்துணையும் சலியாதார், சைவ மொடு
செந்தமிழும் சீர்த்தி மேவ
அனைத்துயரு முயற்சிகளான் அருந்தமிழ்மா
நிலமெல்லாம் அறிந்து போற்றும்
மனத்திட்ப மதிவல்லோர் சுப்பையா
பிள்ளையெமை மறப்ப தேயோ!

இலக்கியமா நாடுகள்தாம் எத்துணையெத்
துணை யெண்ணப் படுமோ! சைவ
நலக்குரியார் நற்றமிழில் நவையற்றார்
எத்துணைபேர் நலம்பெற் றுய்ந்தார்!
புலக்குரிய நூல்களெனப் புகழ் பரப்பி
எத்துணைதாம் போந்த! எண்ண
நிலைத்திடுசீர் சுப்பையா பிள்ளையவர்
மனமொழிமெய் நிகழ்ச்சி யாமே.

இமயமுதல் குமரிவரை அன்றுமுதல்
இன்றுவரை இதுபோற் சைவ
சமயமொடு தமிழ்மொழிக்குச் சாற்றுநிறு
வனமொன்று சமைந்த தில்லை
தமையொருவர் நிகராத சால்பினில்தா
மரைச்செல்வர் தமது வாணாள்
இமையளவும் இதைமறவார் பிரிந்துசெல
எங்ஙனந்தான் இசைந்த தேயோ!

—கவிஞர் சி. து. கன்னிசாமி.

## கனவுகளை நனவாகச் செய்வோம்!

தமிழறிஞர் எழுத்துப்பணி தொடரும் வண்ணம்
தக்கவழி வெளியீட்டை ஏற்றுச் செய்தார்;
இமயம்போல் மொழிவளர ஆக்கம் காண
எண்ணியவர் எண்ணியதைச் செய்த தாலே
நமதுள்ளம் தனைக்கவர்ந்தார்; ஐயா விற்கு
நன்றிக்கடன் அவர்பணியைத் தொடர்வ தாகும்;
அமிழ்தான தமிழ்வாழ கழகம் மூலம்
ஐயாவின் கனவுகளை நனவாய்ச் செய்வோம்!

—பேராசிரியர் கா. பா. குருசாமி, எம்.ஏ., எம்.லிட்.

## தேனீயாய் வாழ்ந்த ஞானி

தேனீயாய் வாழ்ந்த ஞானி
தமிழுக்கே தேய்ந்த மேனி
வானிலவு போல் ஒளிர்ந்தான்
புலவர்க்கு வாழ்வு தந்தான்
கழகத்தைக் கட்டிக் காத்தான்
கடுத்தொரு வார்த்தை பேசான்
பழக்கததில் குழந்தை அம்மா
ஒழுக்கத்தில் உயர்ந்து நின்றான்.

— மு. முத்துகாளத்தி, எம். ஏ.
இணையாசிரியர் 'தமிழரசு', சென்னை.

## அருட்கடலே! மறைந்தீரோ?

[புலவர். திரு. பொதிகைச் செல்வன்
பவானி.]

திருக்குறளின் ஒளிபரப்பும் செங்கதிரே!
தமிழ்ச்சங்கத் தேனே, உள்ளம்
உருக்கிடவே எமக்குமிகத் தந்தவரே!
தமிழ்ஒளியை உலகம் எங்கும்
பெருக்கிடவே வந்தவரே! தன்னிகரில்
சுப்பையா பிள்ளை என்னும்
அருட்கடலே! தமிழுக்கோர் அருந்துணையே!
மறைந்தீரோ? அந்தோ! அந்தோ!! 1

பெற்றதமிழ்த் தாயவள்கண் ணீர்சிந்தத்
தமிழ்நெஞ்சம் பெற்றோர் எல்லாம்
உற்றதந்தை மறைந்ததுபோல் அதிர்ச்சியினால்
உடல்நடுங்கி உளத்தில் செந்தீப்
பற்றியது போல்துடித்துப் பதைபதைத்து
மிகஏங்கப் பைந்தமிழ்த்தாய்
நற்றவத்தின் பெருமகன்சுப் பையாநீர்
எமைப்பிரிந்தீர்! நன்றோ? ஐயா! 2

அன்புருவப் பெருந்தகையீர்! நம்தமிழ்த்தாய்
நலமோங்க ஆர்வம் கொண்டே
இன்புருவம் சேரிளமை எழுச்சியுடன்
எண்பத்து ஆறும் ஆண்டின்
தென்புருவத் தோடிங்குத் தமிழ்ப்பணிகள்
நிதமபுரிந்த செம்மலே! எம்
என்புருகத் துயரத்தீ தனில்தள்ளி
எமைப்பிரிந்தே எங்குச் சென்றீர்? 3

தண்ணியல்சேர் நம்மருமைத் தமிழன்னை
ஒப்பற்ற தவத்தால் வந்த
புண்ணியரே! வையத்தில் உம்மைப்போல்
தமிழ்த்தொண்டு புரிந்தார், உண்டோ?
பண்ணியநும் பெரும்பணியால் தாயவள்ஓர்
புதுப்பெருமை படைத்தா ளன்றோ?
எண்ணியெண்ணித் தாயவட்கே உம்போலத்
தொண்டுசெய இனியார் உள்ளார்? 4

## பொற்பதிப்பாய் நின்றாய் பொலிந்து

[புலவர் இறைக் குருவனார்]

1. அறிவுக் கனியின் அருஞ்சுவையை மாந்தும்
செறிவுடைய செந்தமிழ்ச் செல்வ - நெறிபிறழாப்
பாங்கில் அரும்பணிகள் பற்பலவும் ஆற்றியே
ஓங்குபுகழ் கொண்டாய் ஒளிர்ந்து!

2. ஏற்றார் மகிழ்ந்தார்ப்ப ஏலாரும் வாயடங்கச்
சாற்று தனித்தமிழில் நூல்பலவும் - ஆற்றலுற
நற்பதிப்புச் செய்தபெரு நாயகமே எம்முளத்தில்
பொற்பதிப்பாய் நின்றாய் பொலிந்து!

3. திருவரங்கர் நல்வழியைத் தேர்ந்துசுப் பையப்
பெருங்கழ கத்தைப் பேணி - அருவினைகள்
ஆற்றினாய் நன்றே அயர்ந்த தமிழினந்தான்
ஏற்றமுறு மாறே இனிது!

4. ஆன்றோர்கள் போற்றும அரிய இலக்கணமும்
ஏன்ற புகழ்சால் இலக்கிய மும் - சான்றுடைய
முன்னை வரலாறும் மொய்ம்பார் அறிவியலும்
நின்னை நினைப்பிக்கும் நின்று!

5. அனைத்துத் துறையினையும் அந்தமிழே ஆள
நினைத்துப் பலபடியாய் நீள - முனைந்துநீ
செய்வித்த நூல்களெலாம் செந்தமிழ்க்கு மாற்றார்செய்
தொய்வகற்றும் நாளும் தொடர்ந்து!

6. ஆரா அமுதமெனும் அந்தமிழில் நூல்களெலாம்
ஈராயிரந் தனையும் எய்டவே - சீராய்ப்
பதிப்பித்தாய் வையகத்தே பைந்தமிழர் வாழ்வை
மதிப்பித்தாய் மாண்பு பெரிது!

7. மறைமலையின் சீர்ப்பயும் மாப்பணியை ஏற்று
நிறைவுறவே செய்த்தமிழ்ச் செல்வ - துறைசிறந்த
மன்பெரிய நூலகமும் மற்றும் கழகமென்றும்
நின்சிறப்புக் கூறும் தெரிந்து

8. செந்தமிழ்ச் செல்வி சிலம்பின் பரல்களெலாம்
சந்தமுற நின்புகழே சாற்றுமால் - கொந்தார்
திருமலராய் செந்தமிழும் செந்நெறியும் போற்றும்
ஒருவனாய் நின்றாய் உயர்ந்து !

9. எழுதும் எழுதுமென் றெம்மனோர் தம்மைப்
பழுதில் தமிழ்ப்பணியில் ஊக்கினாய் - பொழுதெல்லாம்
ஐயநீ செய்யும் அருவினைகள் தம்மையெண்ணி
நையுமால் நாளும் மனம் !

10. வெற்றி தமிழ்க்கு விளைக்கும் வியன்பணியில்
சற்றும் தளராத தாளாள - நற்றிறத்தோய்
பொன்றினாய் அல்லை புகழ்வடிவில் இந்நிலத்தே
நின்றொளிர்வாய் என்றும் நிலைத்து !

## சாவாமல் தமிழ் காத்தார் சாம்பலிலும் சிவாமாறர் !

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

கோடை யிடியே குளிர்மழையே உங்களால்
நாடு செழிக்கலாம் மொழிசெழிக்க நாளெல்லாம்
ஓடி யுழைத்த பெருமகனார் சுப்பையா
இல்லா உலகம் இருண்டுளது எங்கட்கு
தேடி முதுநூல் திறம்படவே அச்சிட்டார்
திகழு மறைமலை நூலகத்தை நேர்செய்தார்
பாடி முடியாது தமிழ்பெற்ற நன்மைபல
நாடு மறவாது நாம் மறவோம் என்றென்றும்.

## வியத்தகு வித்தகர் !

[நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை]

அன்பும் பண்பும் ஆற்றலும் மிக்கவர்
எங்கும் சென்று எவரையும் அணுகி
இனிய முகத்துடன் இனியவே பேசி
அவனியிற் சிறந்த சிவநெறி யாகிய
சைவசித் தாந்தச் சன்மார்க் கத்தினைப்
புகட்டக் கூடிய புதுப்புது நூல்களை
எழுதச் செய்து எழில்மிகும் வடிவில்
வெளியிடு புகழுடை வியத்தகு வித்தகர்
சைவசித் தாந்தநூற் பதிப்புக் கழகம்
தொடங்கிய பின்னர்ப் பன்னெடுங் காலம்
ஆட்சி யாளரா யரும்பணி புரிந்துநம்
அன்னைத் தமிழுக் கருஞ்சிறப் பளித்த
பெருமை யுடையவர், பிறமொழி மயக்கால்

தாய்மொழி யாகிய தமிழை மறந்த
தமிழர் பலரைத் தட்டி யெழுப்பவும்
தமிழின மக்களின் தனிச்சிறப் பாகிய
தெய்வ பக்தியில் தீவிரம் கூட்டவும்
தமிழி லக்கியச் சமயமா நாடுகள்
அடிக்கடி கூட்டி அருந்தொண் டாற்றிடும்
சுப்பை யாவின் அப்பெருந் திறமை
பொன்னெழுத் துக்களால் பொறிக்கத் தக்கது.

## தாயை மறவாத பிள்ளை

புகழ்பெருக்கும் சித்தாந்தக் கழகம் என்ற
புதுமைமிகும் நிறுவனத்தைக் காத்து,
இகழ்பவர்கள் முன்னாலே தமிழுக் கென்றே
ஈடற்ற 'நிலைய'மெனச் செய்து நல்ல
தகவுகடல் நூல்களெலாம் தரத்தி னோடும்
தடையின்றி வெளிவருதல் செய்தார் அந்தப்
புகழ்மிகுந்த தமிழ்ச் செம்மல் தமைநினைந்து
போற்றுகிறேன் வணங்குகிறேன் வாழ்த்துகின்றேன்!
அறிவிருக்கும் பெட்டகங்கள் நூல்கள் என்ற
அருமையினை உணர்ந்ததனால் இடை விடாமல்
செறிவுடைய பழம்நூலும் அறிவியல்சேர்
சிறப்புடைய புதுநூலும் பதிப்பித்தார் நற்
பொறியியலும் மருத்துவமும் சமய நூலும்
புதியபல கலைநூலும் தந்து, தாயின்
வறியநிலை நீக்கியவள் வாழ வைத்தார்!
வன்மைமிகும் சுப்பையா பிள்ளை என்பேன்!

டாக்டர். தமிழண்ணல்.
தமிழியல் துறைத் தலைவர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்.

## சொல்லக் கூடுமோ?

சுப்பையா பிள்ளை என்றால்
சொற்றமிழ் முன்னே நிற்கும்!
சுப்பையா பிள்ளை என்றால்
சுந்தரக் கழகம் தோன்றும்!
சுப்பையா பிள்ளை என்றால்
சோர்வுகள் பறந்து போகும்!
சுப்பையா பிள்ளைக் கொப்பாய்ச்
சொல்லவுங் கூடு மாமோ?

ச. சாம்பசிவனார்,
தமிழ் விரிவுரையாளர், மதுரை, காமராசர் பல்கலைக் கழகம்.

———

# கருமத்தின் கட்டளைக்கல்

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா இளங்குமரன்]

எண்பத்தாறு ஆண்டுகள் இன்னிசை பொழிந்த உயிர்க் குயில் கூட்டை விட்டுப் பறந்துவிட்டது!

கூடு ஒளியொடு கூடிவிட்டது!

குயிலின் ஒலியை நேரில் கேட்க முடியவில்லை!

குயிலுறைந்த கூட்டைக் கண்ணால் காண முடியவில்லை!

ஆனால், அத் தமிழ்க் குயிலின் இன்னிசைப் பதிவு தமிழுள காலமெல்லாம், தமிழ் முழு துலகெலாம் எழுந்துகொண்டே விருக்கும்.

எண்பத்தாறு ஆண்டுகளின் இடையரு முயற்சி, அவ்விசைக் குயிலுக்குத் தாமரைத் திரு நல்கியது; செந்தமிழ்ச் செல்வரைச் சேர்த்தது; பேரவைச் செம்மலைத் தந்தது. இவற்றால் எல்லாம் அத் தமிழ்க் குயில் கொண்ட பயனென்ன! பேறென்ன! பிறர்க் கென வாழ்ந்த பெற்றிமை ஒன்றை தனக் கமைதியாக்கிக் கொண்டது.

தமிழ் உலகுக்கோ எய்ப்பில் வைப்பாய்-கருவூலமாய்-கவின் மணிப் பேழையாய்-காலந்தொறும் கருதிக் கருதிக் கொள்ளும் புதையலாய் வளஞ் சுரந்தது.

ஒரு தனி வாழ்வின் ஈடிலா வெற்றிக்கு எடுத்துக்காட்டு தாமரைச் செல்வர் வாழ்வு!

நலிக்கும் நோய்க்கு இடையே நாளும் வாழ்ந்தாலும்,

வேளை தவறாது மருந்து உண்டு மலங்கினாலும்,

இடும்பைக்கு இடும்பை படுத்து ஏற்ற முறுத்தவல்ல எடுத்துக் காட்டாம் வாழ்வு தாமரைச் செல்வா வாழ்வாயிற்று.

குன்றத்தின் முன்னர்க் குறுகிப் பிடர்கடுக்க
நின்றக்கால் தத்தம் நிலையறிவார்;
தாமரைச் செல்வரின் தகை மாண்ட பணித்திறத்தை
முற்றாக அறிய வல்லாரே தம்மளக்க வல்லார்
கருமத்தின் கட்டளைக்கல் தாமரைச் செல்வரே
என்பதைக் காலம் கட்டாயம் உணர்த்தும்.

———

# வழிகாட்டும் வான்பொருள் வ. சு.

[செஞ்சொற் கொண்டல், தமிழாகரர், டாக்டர் பேராசிரியர், சொ. சிங்காரவேலன், எம் ஏ ,பிஎச்.டி.]

உலகெங்கணும் உள்ள நூலகங்களில், கண்கவர் வனப்புடன் இருக்கும் கழக வெளியீடுகளில் தாமரைத் திரு. வ. சு. அவர்கள் நிலைபெற்றிருப்பார். தமிழ்ப் புலவர்கள் நெஞ்சங்களுக்கெல்லாம் 'வழிகாட்டும் வான்பொருளாக' அவர்கள் திகழுவார். திருவரங்கனுர் ஆகிய தம் முன்னவர் தொடக்கிய முத்தமிழ்ப் பணிகளை முட்டின்றிச் செய்து, இறுதிவரை வீரம் ததும்ப விளங்கிய பெரியவர் வாழ்வு தமிழக இலக்கிய வரலாற்றுப் பேரேட்டில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பெறும், பொலிவும் வலிவும் உடையவை.

எல்லாம் வல்ல அம்பலவாணர் திருவடிகளில், தாமரைத் திரு. வ சு அவர்களின் நல்லுயிர் அமைதிபெற்றுப் பேரா இன்பப் பிழம்பாகி என்றென்றும் விளங்கும். அவர்கள் விட்ட பணிகளைத் தளராது செய்து முடிக்கும் செயற்றிறமும், இன்சொல்லும், நிர்வாக ஆற்றலும், கால்நூற்றுண்டுகளுக்கு மேலாக உடனிருந்து பெற்ற பேரனுபவம் ஆகிய பட்டறிவும் வாய்க்கப்பெற்ற அன்பர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களை வாழ்த்தி, பெரியவரின் தமிழ்ச்சுமையை ஏற்றுப் பணி தொடர்ந்து, கழகப் பணிகளைச் சிறக்கச் செய்து வரத் திருவருளை வணங்கி அமைகின்றேன்.

வாழ்க தாமரைத்திருவினர் திருப்பெயரும், பீடும்!

வாழ்க சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்!

"நெல்லைத் திருமண் ஈன்றளித்த
நீடு புகழார் திருவாள!
எல்லை யிகந்த நூற்பணிகள்
இன்று வரைக்கும் முடித்தோனே!
இல்லை யுனக்கே நிகராவோர்,
இதயத் திருக்கும் சுப்பையா
தில்லைப் பெருமான் திருவடியில்,
திகழ்வாய் ஊழி, ஊழிதொறும்!"

———

# நினைவால் நனைந்த பக்கங்கள்

[டாக்டர் க. ப. அறவாணன், தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர், இலயோலாக் கல்லூரி, சென்னை-34]

தமிழ்ச்சுப்புவை நினைக்கும் போது, ஏன் என் கண்கள் ஈரமாகின்றன? எழுதும்போது, ஏன் கைகள் நடுங்குகின்றன? எண்ணும்போது, ஏன் பெருமூச்சு நெட்டுயிர்க்கின்றது? காரணம் வெறும் புத்தகம் வெளியிடுவதோடா அவர்கள் அமைந்தார்கள்! இல்லையே இல்லையே!

நூலாசிரியர், பேராசிரியர், அதிகாரி, அமைச்சர், யார் எனில், அவர் தமிழோடு தொடர்புடையவர் வீடாக இருப்பினும் சரி, அவர் கால்கள் எத்தனை முறை வீடு தேடி நடந்திருக்கும்? படியேறிச் சோர்ந்திருக்கும்? அவர் நா, நலமா என உசாவியிருக்கும்!

அவர் வாழ்ந்த போதும், மறைந்த பின்னும் அத்தகைய ஒரு நூல் வெளியீட்டாளரைக் காண முடிந்ததா? காண முடியுமா? முடியாதே! முடியாதே!

பதிப்புத் துறையில் எத்தனை வணிக நிறுவனங்கள் வந்தன! இருந்தன; மறைந்தன; சில வாழுகின்றன. ஆனால், பதிப்பு வெற்றியைச் சார்ந்து தமிழ் மதிப்பு உயர அரும் பணிகள் ஆற்றியார் - போற்றியார் உண்டா?

அதோ, லிங்கிச் செட்டித் தெருவில், வான்முட்ட அறிவுச் சிங்கமெனத் தலை நிமிர்ந்து நிற்கும் மறைமலை நூலகம், அய்யா அவர்களின் உழைப்புக் கற்களில் உருவான மாடம் அல்லவா?

அதனை நினைக்கும்போது அவர்களை நினைக்கும்போது — நெஞ்சம் விம்முகின்றது.

1967 தொடங்கி - அன்றுவரை (24-1-83) அவர்களைப் பாளையிலும், நெல்லையிலும், பாபநாசத்திலும், சென்னையிலும் நூற்றுக்கணக்கில் சந்தித்தபோது—

அவர்கள் சோர்வுருமல் பேசியது....பேசியது இரண்டுதான்: ஒன்று - தமிழ்! இரண்டு - கழகம்!

தமிழினத்தில் கூட, இப்படிக் குறிக்கோள் வெறியரைக் காண முடியுமா...? வென்றிலை —

காணமுடியும்! அவர்கள்தான் நான் அறிந்த அய்யா! வெளியீட்டுக் களத்தில் தமிழ் வேள்வி நடத்திய சிவ வேதிகர்! தமிழ் வயலில் அறிவுப் பயிர் விதைத்த நிலவாளுநர்!

———

# ஓ! ஆலமரமே!

[டாக்டர் - தாயம்மாள் - அறவாணன், செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை-32.]

மெலிந்த உருவம், கூரிய சிந்தனை, வரும் முன் நோக்கும் எதிர்காலப் பார்வை, உள்ள உறுதி, உலையா ஊக்கம், இவற்றின் மொத்த உருவமே உயர்திரு வ. சுப்பையாப் பிள்ளை அவர்கள். நூல்களைப் புரட்டிப் புரட்டி ஓய்ந்த கண்கள், எடுத்த செயலை முடித்தே ஆவது என்ற ஊக்கம்.

ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை.

என்ற குறளுக்கு இலக்கணம் அவர்களே!

ஐயா அவர்களின் இறுதி மூச்சும் பேச்சும் நூல்களே. அவர்கள் இவ்வுலக வாழ்வை நீக்குமுன், எட்டு நாள்களுக்கு முன்பு 16-1-83 இல் நாங்கள் அவர்களைப் பார்த்து உரையாடினோம். படுக்கையில் இருக்கும் ஐயா கையில் எங்கள் புது நூலை (பல்லாங்குழி-திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு) கொடுத்தோம். வாங்கிப் புரட்டிவிட்டு மேலும் உழைத்து நூல்கள் வெளிவர வாழ்த்துக் கூறினார்கள். வாழ்த்தோடு அவர்கள் வழங்கிய புன்சிரிப்பை இனி எங்குக் காண்போம்!

தான் உயிர் வாழ நினைப்பது தமிழ் நூல்களுக்காகவே என்ற அவர்கள் கருத்தை எண்ணிப் பார்க்கும் போது எங்கள் உடம்பெல்லாம் சிலிர்த்து கண்கள் நீரைப் பொழிகின்றனவே!

பதினைந்து ஆண்டுகளாகப் பழகி அவர்கள் ஊக்கத்தையும் உறுதியையும் உணர்ந்தவை எங்கள் உள்ளங்கள்.

இன்னும் சிலகாலம் இருந்து தமிழுக்குத் தொண்டு செய்ய இயலாமல் காலம் அழைத்துக் கொண்டதை எண்ணிக் கதறுவதைத் தவிர வேறு என்ன செய்ய?

ஆலமரம் விழுது ஊன்றித் தமிழைக் காத்தது. ஆலமரத்தின் மூலமரம் இல்லாவிட்டாலும் விழுதுகள் இனி அடிமரமாய் நின்று ஆக்கம் பல தரும் என்ற நம்பிக்கையில் .....

———

# சுப்பையா பிள்ளை என்ற நிறுவனம்

[க. சி. கமலையா]

ஓயாது ஒழியாது அயராது தளராது, தமிழ் நூல்கள் வெளியீட்டுப் பணியில் உழைத்த ஒல்லியான உருவம் வயிரமுத்து சுப்பையா பிள்ளை. தமிழும் கழகமும் சுப்பையாபிள்ளையின் இருகண்கள். இவ்விரண்டையும் சார்ந்து நிற்கும் மறைமலையடிகள் நூல்நிலையம் சுப்பையாபிள்ளையின் மூன்றாவது கண். நெல்லையினின்றும் சென்னை பெயர்ந்து, அறுபது ஆண்டுகள் பணியாற்றித், தடங்கள் ஆறுகள் பல கடந்து, அறிஞர்களை நூல் எழுதும் பணியில் ஆற்றுப்படுத்தியவர் சுப்பையாபிள்ளை. அச்சேறியவையோ அச்சேறாதவையோ, ஏட்டில் உள்ளவையோ எழுத்தில் உள்ளவையோ, நாட்டில் உள்ளவையோ நகரத்தில் உள்ளவையோ, தமிழ்நூல்கள் மறைந்து போகாதவாறு அவற்றைப் பதிப்பித்தவர் சுப்பையாபிள்ளை. அன்றயில் அடைந்து கிடந்த அறிஞர் பலரைச் சுப்பையாபிள்ளை அம்பலத்துக்குக் கொண்டு வந்தார்; ஊரறிந்த தமிழ் அறிஞரை நாடறியச் செய்தார்.

சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர் சுப்பையாபிள்ளை. வரையறையுள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சியாளர். சைவசித்தாந்த நூல்கள் மட்டுமன்றித் தமிழ்ச் சார்புள்ள அனைத்து நூல்களும் கழகத்தின்வழி வெளிவந்தன. மொத்த நூல்களின் எண்ணிக்கையையும் சைவசித்தாந்த நூல்களின் எண்ணிக்கையையும் ஒப்புநோக்கின் பின்னது மிகச் சிலவே. மீகாமனின்றிக் கப்பலைச் செலுத்துவது இயலாது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகக் கப்பலைப் பாறையிலோ கரையிலோ மோதாதபடி—தரை தட்டாதபடி—சுப்பையாபிள்ளை ஓட்டிச் சரக்குகளைக் கரை சேர்த்தார்.

சுப்பையாபிள்ளையின் மூச்சும் பேச்சும் தமிழ். தொன்மைத் தமிழ்மொழிக்குப் பாதுகாப்பு வேண்டுமா? இரண்டாயிரம் ஆண்டுகளாக உயிர்த் துடிப்புடன் இயங்கிவந்த தமிழ், இனி மேலும் நெடுங்காலத் தொடர்பை நெகிழவிட்டுத் தன் ஒப்பற்ற தொன்மை இலக்கியத்தை இழந்துவிடுமா? தனித்தமிழ் இயக்கம் தமிழ்மொழி வளர்ச்சிக்கு முட்டுக் கட்டையா? இவை பற்றிச் சுப்பையாபிள்ளை தாம் நடத்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வழி நிரல்பட்ட செயல் முறையொன்றைக் கடைப்பிடித்தனர். சங்ககாலம் முதல் இன்றுவரை தமிழர் நாவில்

தவிரும் சொற்களை இழந்துவிட்டால், தமிழ்மொழி வேறு மொழியாய் மாறிவிடும். நாட்டுப்புறத் தமிழ்மக்கள் பயன் படுத்தும் சொற்களுக்குப் புறம்பாக வேற்றுமொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. பிறமொழிமக்களுடன் தொடர் புண்டாகும் பொழுது சில சொற்கள் தமிழுக்கு வருவது இயல்பே. அவற்றை மிகைப்படுத்தினால் தமிழின் தொன்மை இலக்கியங் களான சங்கநூல்கள், திருக்குறள், சிலப்பதிகாரம், மணி மேகலை போன்ற நூல்கள் தமிழர்க்கு வேற்று மொழி நூல்கள் போலாகிவிடலாம். ஏன், ஆழ்வார் நாயன்மார்களின் அருளிச் செயல்கள், கம்பராமாயணம், பரிமேலழகர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் போன்ற உரையாசிரியர் உரைகள் தமிழ்மக்களுக்குக் 'கிரேக்க' மொழி போன்று தோன்றும். தமிழிலக்கியத்தைத் தமிழர் இழக்கநேரிடின் ஈராயிரம் ஆண்டுகட்கும் கூடுதலான தொன்மை சிதையும். பிற மொழிக்கலப்பு எதிர்ப்பு இயக்கத் தினால் தமிழின் தொன்மை இலக்கியம் இன்றும் பயிலப்பட்டு வருகிறது. படிப்பில்லாத்தமிழ்மகனும் திருக்குறள் போன்ற நூலில் கையாளப்பட்ட சொற்களை இன்றும் பேசிவருகின்றான். 'திருமுருகாற்றுப்படை'யில் கூட நூற்றுக்கு மூன்று சொற்களே வடமொழிச் சொற்கள். 'பிறமொழிச் சொற்கள்' என்ற சொற் றொடரில் வடமொழியுமடங்கும். பரிதிமாற்கலைஞர், மறைமலை அடிகள் ஆகியோரைப் பின்பற்றி எழுந்ததாகச் சொல்லப்படும் பிறமொழிக் கலப்பு எதிர்ப்பைச் சற்றுக் கடுமையாகவே சுப்பையா பிள்ளை தம் திருவன நூல்களில் நிலவக் கண்டார். கடுமைக் கொடுமை சிறிது தளர்த்தப்படலாமெனினும் கைவிடக் கூடாதது.

சுப்பையாபிள்ளையின் தமிழ்ப்பணியை நினைவு கூரும் போது அவருடைய தமையனார் திருவரங்கம்பிள்ளை தொடக் கத்தில் கடைப்பிடித்த வழியை மறக்க இயலாது. மூத்தவர் காலமான பிறகு ஏறத்தாழ முப்பத்தெட்டாண்டுகள் அவர் விட்டுச் சென்ற சுமையைத் தாங்கியதோடுமட்டுமன்றி ஒளி வீசும் விளக்காகச் சைவசித்தாந்தக் கழகத்தைத் திகழச் செய்த பெருமை இளையவர் சுப்பையாபிள்ளையைச்சாரும். சுப்பையா பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றையும் அவர்தம் தமையனார் திருவரங்கப்பிள்ளை வாழ்க்கை வரலாற்றையும் புலவர் இரா. இளங்குமரன் தெள்ளுதமிழில் திறம்பட எழுதியுள்ளார். பதிப்புத் துறை, மறைமலை அடிகள் நூல் நிலையத்தை நிறுவியமை, குணநலன்கள் ஆகியவை ஊன்றிப் பார்க்கத்தக்கவையாகும்.

கழகமும் சுப்பையாபிள்ளையும் ஒன்றென்று கொள்வர் அறிந்தோர். எனவே கழக நூல்கள்பற்றித் தெரிந்து

கொள்ளுதல் நன்று. வெளியிடப்பட்ட நூல்கள் தமிழை வளப்படுத்திய துறைகள் பலவாகும். இலக்கியம், கலை, வரலாறு, விஞ்ஞானம், சமயம், வாழ்க்கைவரலாறு, மருத்துவம், மொழிபெயர்ப்பு, மேலும் பல துறைகளைச் சார்ந்தவையும் உள. கழக ஆசிரியர்கள் துறைபோகக் கற்றுப் பேரும் புகழும் பெற்றவர்கள். நூல்களின் எழுத்துத் தரம் மட்டுமன்றிக் கட்டடம், அச்சுச்சீர்மை போன்றவையும் அவற்றில் காணலாம். பழைய நூல்களை எளிதில் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் உரையுடன் பதிப்பித்தல் கழக நூல்கள் பலவற்றின் சிறப்பாகும். கிடைத்தற்கரிய அச்சேறிய பழைய தமிழ் நூல்களையும் தமிழ் பற்றிய ஆங்கில நூல்களையும் மீண்டும் பதிப்பித்து அவை மறைந்து போகாதவாறு காப்பாற்றியதும் கழகம் கடைப்பிடித்த முறையாகும். கனகசபைப்பிள்ளையின் Tahils 1800 years ago, இராமச்சந்திர தீட்சிதரின் Cilappadhinaram, முத்துராமலிங்க சேதுபதியின் நீதிபோதவெண்பா, ஜி. யூ. போப்பின் Purapporul Venbamalai ஆகியவை அவற்றிற் சில. திருக்குறளை ஆங்கில விவிலியம் போல் கட்டடம் செய்து வழங்கிய பெருமையும் கழகத்திற்குரியது. திருக்குறளைப் பரப்புவதில் மு. வரதராசன் எழுதிய 'திருக்குறள் தெளிவுரை பத்து நூறாயிரம் படிகளுக்கு மேல் விற்ற சிறப்பு மறக்கவொண்ணாதது. கழக நூல்கள்பற்றிய விரிவான ஆய்வு தனியாக மேற்கொள்ளப்பட வேண்டியதாகும்.

மறைமலை அடிகள் நூல்நிலையம் தமிழறிஞர்களின் திருப்பயனத் தலமாகும். மறைமலை அடிகள் உதவிய நான்காயிரம் நூல்களுடன் பெருமளவு வேறு நூல்களையும் சேர்த்து அடிகளின் பெயர் விளங்க அரிய பணியைச் செவ்வனே செய்து முடித்தவர் சுப்பையாபிள்ளை. அந் நூல்நிலையச் சிறப்புப்பற்றி உள்நாட்டு, வெளிநாட்டு ஆய்வாளர் கண்டும், நுகர்ந்தும், பயன் பெற்றும் சொன்ன புகழுரைகள் பலவாகும். இந்நூல் நிலையம் ஒன்று மட்டுமே சுப்பையாபிள்ளையின் செயலாற்றலைத் தெரிவிக்கப் போதுமானது.

சுப்பையாபிள்ளை அகவை எண்பத்தாறு ஆகும் இளைஞராய்த் திகழ்ந்து சுறுசுறுப்புடன் விறுவிறுப்புடன் செயலாற்றினர். அரிய நூல்கள் பெற்றுப்பதிப்பிடும் வாய்ப்பினை அவர் இழப்பதில்லை. அதே போன்று கழகத்து நூல்களை எழுத ஆசிரியர்களை—அறிஞர்களைத் தேர்ந்தெடுக்கும் திறம் அவரிடத்திருந்தது தனிச்சிறப்பாகும்.

''இதனை இதனல் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்'

என்ற குறள் வழியை அவர் பின்பற்றினர். அகவையில் தம்மைக் காட்டிலும் இளையவரையும் தமிழன்பர் என்று கண்டால் சுப்பையாபிள்ளை உவப்பார்; அவர்தம் அறிவைப் பயன் படுத்துவார்.

சுப்பையாபிள்ளையை ஒரு நிறுவனம் என்று சொல்லலாம். நிறுவனத்தை நடத்தும் ஆற்றல் நிரம்பிய அவர் பொன்னே போல் பொருள் சேர்த்து நிறுவனத்தின் செல்வநிலையைச் சிறிதேனும் சிதையாமல் காப்பாற்றிய பெருமையுடையவர். அனைத்தும் எதற்காக? தமிழ் சிறக்கத், தமிழர் சிறக்கத் தமிழிலக்கியம் உலக நாடுகளின் மூலை முடுக்கெல்லாம் சென்று சிறக்க, உழைத்து உயர்ந்தவர் சுப்பையாபிள்ளை. அவர்தம் பெருமை சொல்லவும் படுமோ!

———

## முயற்சியின் திருவினை

கழகச் சுப்பையா பிள்ளை என்றவுடன், உழைப்பு, இடை விடாத உழைப்பு, இளைப்பாற்றல் இல்லாத உழைப்பு என் நினைவுக்கு வருகின்றது.

தமது முதிர்ந்த வயதிலும், சமுதாயத்தில் பல்வேறு குறைகளைக் கண்ட காலத்திலும், எதிர்ப்புக்கள் இடையூறுகள் ஏற்பட்ட போதிலும், விடாமுயற்சியோடு, ஓர் இளைஞனின் எதிர்கால நம்பிக்கையோடு அவர் பல இடங்களுக்கும் சென்று, பலரைச் சந்தித்து, ஆலோசனை கேட்டு, உதவிகோரி, ஒத்துழைப்பைப் பெறுவது யாரும் வியக்கத்தக்க காட்சியாகும்.

திருநெல்வேலியில் விதைக்கப்பட்ட கழகம், சென்னையில் சிறப்புற்று, மதுரை, கோவை, திருச்சிபோன்ற நகரங்களில் கிளைகள் விட்டு, நாடு முழுவதும் நிழல்தரும் மரம் எனப் பெயர் எடுக்கச் செய்த பெருமை திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் முயற்சியின் திருவினையாகும்.

டாக்டர். ஞானப்பிரகாசம்,

தூய சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை.

———

# இணையற்ற தமிழ்த் தொண்டர்

[பேராசிரியர் ஏ. ஆர். முத்தையன், எம். ஏ. எம். லிட்.]

திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தன்னைத் தோற்றுவித்த இருவருள் இளவலாராகிய திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களை இழந்துநிற்கின்றது. மிக்க இளமையிலேயே குடும்பப் பொறுப்பையும் கழகப் பொறுப்பையும் ஏற்று, கழக வளர்ச்சிக்கே பாடுபட்டு அதனை வளர்த்து இந்தியத் துணைக் கண்டத்திலேயே இதனையொத்த தமிழ் வெளியீட்டுக் கழகம் வேறில்லையென்றுரைக்குமாறு இதன் பெயர் சிறக்கத் தொண்டாற்றிய திரு வ. சு. அவர்களின் இழப்பு கழகத்திற்கு எவ்வாற்றானும் ஈடுசெய்ய முடியாத தொன்றாகும்.

அவர்தம் பண்பு நலங்களுள் யாதனைக் கூறி யாதனை வியப்பாம்! தம் கருத்தைக் கேட்போர் உளங்கொள்ளுமாறு எடுத்துரைக்கும் சீர்சால் பேச்சாளர். மிக்க சுவை பொருந்திப் பயனளிக்கும் 'குழந்தைப் பேச்சு' 'பிழையின்றிப் பேசுக' 'எங்களூர்ச் சந்தை' போன்ற மழலை இலக்கியம் பல செய்த சிறந்த எழுத்தாளர்.

கருத்துச் செறிவுடையனவும், பிழையற்றனவும், கற்கும் ஆவலைத் தூண்டுவனவும், தனித்தமிழ் ஆர்வத்தை ஊக்குவனவும், கட்டடச் சீர்மை சிறந்தனவும், கண்கவர் வனப்பினவும் ஆகிய தமிழ் ஆங்கில நூல்கள் பலவற்றைத் திறம்படப் பதிப்பித்த சிறந்த பதிப்பாளர்.

நாட்டு நலனுக்கும், மக்கள் தேவைக்கும், காலப் போக்கிற்கும் ஏற்ற பல இலக்கிய இலக்கண, அகரவரிசை, சமய, சமூக, மொழியியல், அறிவியல், சட்டவியல், தமிழ் ஆங்கில ஆக்கம் எனும் பல்துறை நூல்களையும் ஏற்றமுற வெளியிட்டுச் சிறப்பெய்திய சிறந்த வெளியீட்டாளர். எழுதிய ஏடுகளை அச்சிட்டு வெளியிட முன்வருவார் இல்லாமையால் உலகிற்கு அறிமுகம் ஆகாமலே மறைந்த புலவர் பலராவர். தமிழ்க் கடல் மறைமலையடிகளார் ஒருவரே தாம் இயற்றிய நூல்களைத் தம் சொந்த அச்சகத்தில் தாமே அச்சிட்டு வெளியிடும் வாய்ப்புடையாராயிருந்தமை நினைவு கூர்தற்குரியதாகும்.

'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்பத் துறைதோறும் சிறந்த

புலமையுடையாரைத் தேர்ந்தெடுத்து நூலியற்றச் செய்து சிறப்புற வெளியிட்டு அவ் அறிஞர் பெருமக்களை உலகிற்கு அறிமுகம் செய்வித்துப் பயன் பெறச் செய்த அந்தணாளராவர்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஒரு கூட்டுப்பங்கு நிறுவனமாதலின் அதன் பங்காளிகளின் முதலுக்கு எவ்வித இழப்பும் ஏற்படாதவாறு ஆழ்ந்து சிந்தித்துச் செயலாற்றித் தம் வாணிகத் திறமையால், முதலீட்டுத் தொகை (பங்குத் தொகை) ஒன்றுக்கு நாலாகப் பெருகுமாறு செய்து கழகப் பங்காளிகளின் பாராட்டையும் அன்பையும் ஆதரவையும் நன்மதிப்பையும் பெற்றுத் திகழ்ந்த வணிக வல்லாளராவார்.

மக்கள் உள்ளங்களிலே நூலறிவையும், நூல்பயில் ஆர்வத்தையும் எளிதிலே தரவல்லவை மாநாடுகளே என்றுணர்ந்த திரு. வ. சு. அவர்கள் திரு. வி. க. போன்ற பேறறிஞர்களைத் தலைவராகக் கொண்ட இருபது மாநாடுகள் நடத்தினர்கள். அவற்றில் நூற்றைம்பதின்மர்க்கும் அதிகமான அறிஞர் பெருமக்கள் கலந்துகொண்டு சிறந்த சொற்பொழிவாற்றினர்கள். அவை யாவும் நூல்வடிவில் நிலை பெற்றுள்ளன.

மாநாடு போன்றே விழாக்களும் பயன்தரும் என்றுணர்ந்த திரு. வ. சு. அவர்கள் திருவள்ளுவர் விழா, திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுவிழா, கழக மணிவிழா போன்ற பல விழாக்களையும் சிறப்புற நடத்தினர்கள்.

விழா நாட்களிலே நூற்காட்சியும் கலைக்காட்சியும் இடம் பெறுமாறுல் அதனால் மக்கள் பெரிதும் பயன்பெறக் கூடுமாதலின் அவற்றையும் சிறப்புற அமைத்தார்கள். இவை போன்ற நிகழ்ச்சிகள் நடைபெற வாய்ப்பாக இராமலிங்க வள்ளலார் சொற்பொழிவாற்றிய அதே கட்டடத்தைப் பெரும் பொருள் கொடுத்து வாங்கி வள்ளலாரின் நினைவாக வள்ளலார் மண்டபமும் அமைத்துள்ளார்கள். அறிஞர் பெருமக்களேயன்றிச் செல்வரும் கலந்துகொண்டு இவற்றையெல்லாம் வெற்றி பெறச் செய்தமை பாராட்டுதற்குரியதாகும்.

'தமிழ் வாழ்க' என வாழ்த்தொலி முழக்குவது மிகவும் எளிதானதே. ஆயின் தமிழ் தழைத்தற்கான திட்டங்களைத் தீட்டுவது அவ்வளவு எளிதன்று. தீட்டிய திட்டத்தின்படி செயலாற்றுவதென்பதோ மிகமிக அரிதாகும். அத்திட்டத்தை மேற்கொண்டு செயலாற்றுவோரைப் பாராட்டுதலும் தக்கவகை சிறப்புச் செய்தலும் அரிதினும் அரிதாகும்.

ஆயின், திரு. வ. சு. அவர்கள் இத்திறத்தில் ஒரு சிறிதும் விட்டுக் கொடுப்பவர் அல்லர். அவர்களால் பாராட்டுப்பெருத —சிறப்புப்பெருத அறிஞரே இலர் எனலாம்.

இவ்வாறு அறிஞர் பலர்தம் வரிசையறிந்து சிறப்புச்செய்த திரு. வ சு. அவர்களின் தமிழ்த் தொண்டைப் பாராட்டிய இந்திய அரசு "தாமரைச் செல்வர்" என்ற விருதையும் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் 'பேரவைச் செம்மல்" என்ற பட்டத்தையும் தமிழக அரசு "செந்தமிழ்ச்செல்வர்" என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தன.

திருவள்ளுவர் விழாவும் திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டு விழாவும் சிறப்புற எடுத்ததோடமையாது கண்கவர் அமைப்பில் தமிழ் ஆங்கிலத்திருக்குறட் பதிப்புகள் பல வெளியிட்ட இவர்களைத் "திருக்குறட் செல்வர்" எனப் பாராட்டுதல் சாலப் பொருந்தும்.

வாழ்க திரு. வ. சு. திருப்பெயர்! வளர்க அவர்தம்புகழ்!

---

## The credit goes to Thiru Subbiah Pillai

There have been periods when the study of Tamil literature has been unjustly neglected, not only by outsiders, but also among sections of the Tamil people. If we are now moving into a period in which the Tamil literary heritage is properly appreciated both by foreigners and by those who enjoy the inestimable privilege of having Tamil as their mother tongue, much of the credit goes to Thiru Subbiah Pillai and the Society of which he is the Managing Director.

— Dr. R. E. ASHER, U. K. (1973)

---

# என் தெய்வத் தந்தை

[தமிழ்த்தொண்டர் கோ. முத்துப் பிள்ளை]

என் இல்லத்தில் தொலைபேசி ஒலித்துக் கொண்டிருந்தது. ஓடிவந்து எடுத்துப் பேசினேன். ஆட்சியாளரின் அன்புக்குரல் கேட்டது. அவருடைய உரையை ஆர்வத்தோடு கேட்டேன். "தங்கள் அழகுத் தமிழைப் படித்தேனையா, குலுங்கக் குலுங்கச் சிரித்தேனையா" என்று தெரிவித்தார். "அரியணையில் அழகு தமிழ்" என்னும் என்னுடைய முதலாவது நூலைப் படித்துவிட்டு அவர் தெரிவித்த கருத்தாகும் இது. ஒருகாலத்தில் ஆட்சி யாளரைக் கண்டுபேசுவதற்க்க எனக்கு அச்சமாக இருந்த துண்டு. "பேரறிஞராயிற்றே, அவரிடம் நாம் பேதைமையாக ஏதேனும் பேசிவிடக்கூடாதே" என்பதுதான் அந்த அச்சமாகும். இத்தகைய பெரியவர் என் நூலைப் பாராட்டிப் பேசியபோது, எனக்கு எத்தகைய மகிழ்ச்சி ஏற்பட்டிருக்குமென்று எடுத்துக் கூறத் தேவையில்லை.

"செந்தமிழ்ச் செல்வி"க்குக் கட்டுரைகள் வரையுமாறு என்னை ஊக்கமூட்டினர் ஆட்சியாளர். நான் மிகவும் தயங்கிக் கொண்டே இருந்தேன். பின்னர், "ஆட்சிமொழித் துணுக்குகள்" என்னும் தலைப்பில் கட்டுரைகள் வரைய எனக்கு வாய்ப்பு ஏற்பட்டது. இதுவரை பன்னிரண்டு கட்டுரைகளை வரைந்துள்ளேன். Cabınet Maker என்னும் தலைப்பில் நான் வரைந்த கட்டுரையைப் படித்துவிட்டு ஆட்சியாளர் ஆளவிலா மகிழ்ச்சியடைந்தார். "கலைக்கலன் செய்பவர்" என்னும் மொழி பெயர்ப்பை நான் வழங்கியிருந்தேன். ஆசிரியர் குறிப்பு ஒன்றைக் கட்டுரையின் கீழே எழுதியமைத்துவிட்டார் ஆட்சியாளர்! "தமிழ்க்கலைச் செல்வர் கோ. முத்துப்பிள்ளை அவர்கள் உதிர்த்த முதிர்ந்துவந்த முத்துக்களைக் கீழே காணலாம்" எள்பதுதான் ஆட்சியாளர் வரைந்த குறிப்பாகும். இதனைக் கண்ணுற்று நான் மெய்சிலிர்த்தேன். இந்தப் பாராட்டிற்கு உரியவனாக என்னை நான் ஆக்கிக்கொள்ள வேண்டுமே என்று கவலையுற்றேன்.

ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனாரின் வாழ்க்கை வரலாற்றை ஒரு நண்பர் எழுதி நூலாக வெளியிட்டுள்ளார். அந்த நண்பருக்கு நான் அதற்கு முன்னரே வழங்கியிருந்த "வாழ்த்துரை" ஒன்றையும் அவர் அந்த நூலில் சேர்த்து வெளியிட்டார். இந்த வாழ்த்துரையைப் படித்துப் பார்த்த

ஆட்சியாளர் என்னுடன் தொலைபேசி வாயிலாகத் தொடர்பு கொண்டார். அவர் கூறிய செய்தியை இந்த வாளுளில் மட்டுமல்லாமல் வருகின்ற வாளுட்களிலும் நான் மறத்தல் இயலாது. "தாங்கள் வழங்கியுள்ள வாழ்த்துரையைப் படித்தேன். உயர்ந்த இலக்கிய நடையில் எழுதியுள்ளீர்கள்" என்று சொல்லிச் சிறிது நிறுத்தினுர். அதன்பின்னர் "தங்கள் பெயர் முத்துப்பிள்ளை என் தந்தையார் பெயர் தங்களுக்குத் தெரியுமா" என்று கேட்டார். "சொல்லுங்கள் ஐயா" என்று விடைபகர்ந்தேன். "வயிரமுத்துப் பிள்ளை. ஆம். தாங்கள் தான் என் தந்தையார்" பாராட்டின் உச்ச கட்டத்திற்கே என்னை இட்டுச் சென்றுவிட்டார் ஆட்சியாளர்!

சிறு துரும்பையும் மதிக்கத் தெரிந்தவர் ஆட்சியாளர் தமிழுக்குத் தொண்டு செய்யும் எவரையும் ஏற்றுப் போற்றும் பெற்றியாளர். தொடக்க நிலையில் இருப்போரையும் முடுக்கி விட்டு முன்னேறச் செய்பவர் அவரேயாவார். அன்னைத் தமிழுக்கு ஆர்வமுடன் பணியாற்றும் தொண்டர் படையை உருவாக்கி உள்ளவரும் ஆட்சியாளரேயாவார்.

"தாங்கள் தான் என் தந்தையார்" என்று என்னைப் பாராட்டினுரல்லரா ஆட்சியாளர்? நன்றியுணர்வோடும் கன்றிய அன்போடும் ஆட்சியாளருக்கு என் விடையை அனுப்புகின்றேன். "தாங்கள் தான் என் தந்தையார். என்னை முன்னேறச் செய்தவரும், முன்னேறச் செய்பவரும் தாங்கள் தாம். தாங்கள் தாம் என் தெய்வத் தந்தை."

---

## நன்றி

கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் மறைவு குறித்து, அன்பர்கள் பலர் நீண்ட இரங்கலுரைகளும், இரங்கற் பாக்களும் அனுப்பியுள்ளனர். குறுகிய காலத்தில் மலர் வெளிவர வேண்டியிருந்தமையால் அன்பர்களின் உரைகளையும், பாக்களையும் சுருக்கியே வெளியிட முடிந்தது என்பதைத் தெரிவித்துக்கொள்வதோடு எமது வேண்டுகோட்கிசைந்து, ஐயா அவர்களைப் பற்றிய கருத்துரைகளை அனுப்பி எமக்கு ஆறுதல் அளித்த அனைவருக்கும் கழகத்தின் சார்பில் எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

ஆசிரியர்.

# நெஞ்சமெல்லாம் நிறைந்தவர்

[பி. வி. கிரி நிருபர்: 'தமிழரசு']

ஒரு சமயம், கழகத்திலிருந்து, "ஐயா தங்களை வரச் சொன்னார்'' என்று தொலைபேசியில் சொன்னார்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை, 'எதற்காக ஆட்சியாளர் அவர்கள் வரச் சொல்லி இருப்பார்?' என்று.

அலுவலகம் முடிந்ததும், நேரே ஆட்சியாளர் அவர்களை அவர்தம் அலுவலகத்தில் சந்தித்தேன். அப்போது அவரது மேசையில் அச்சுத்தாள்களும் (புரூப்), கடிதங்களும், அதற்குப் பதில் எழுதுவதற்கான அஞ்சலட்டைகளும் காணப்பட்டன.

ஆட்சியாளர் அவர்கள், என்னை மகிழ்ச்சியுடன் வர வேற்று அமரச்சொல்லி விட்டு, "சங்க இலக்கியப் பேழையினை யாம் கொண்டு வந்தோம். அதேபோல் இளைஞர்க்கான பேழை ஒன்றையும் கொணர விருப்பம் கொண்டுள்ளோம். அதற்கான ஆக்கப் பணிகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. இந்தப் பேழையில். என்னென்ன தலைப்புகளில் நூல்களை வைக்கலாம்?'' என்று கேட்டார்கள். நான் அசந்து போய் அப்படியே உட் கார்ந்துவிட்டேன்,

''அவரோ தமிழ்க் கடல்; தம் பொன்னான நேரத்தைச் செலவிட்டு, மிக மிக எளியேனாகிய என்னிடம் யோசனை கேட் பதா?" என்று நெகிழ்ந்து போனேன்; அவரது பெருந்தன்மை கண்டு வியந்து போனேன்.

ஆட்சியாளர் அவர்கள் எவரையும் மதிக்கும் பெருந்தன்மை யுடையவர். 'திறமைக்கு வயதில்லை' என்பது அவர்களுடைய ஆணித்தரமான கருத்து என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களை நான் பலமுறை சந்தித்திருக்கிறேன்; செய்தியாளர் என்ற முறையில் பேட்டியும் கண்டிருக்கிறேன். மலைபோல் பணிகள் குவிந்திருந்தாலும் சற்றும்மலைக்காமல் 'விரைந்து'வென முடிக்கும் ஆற்றல் பெற்றவர்கள். அவர்களிடம் இன்றைக் கெல்லாம் பேசிக்கொண்டேயிருக்கலாம். குற்றால அருவிபோல, தமிழருவி கொட்டிக்கொண்டே இருக்கும்.

ஆட்சியாளர் அவர்களிடம் நான் கற்றுக்கொண்ட—நாம் கற்றுக் கொள்ளும் பாடம்-சுறுசுறுப்பு-ஓயாத உழைப்பு, பண்பு.

ஆட்சியாளர் அவர்களின் பிரிவு, அருந்தமிழ் உலகுக்குப் பெரும் நட்டம். அவர்கள் நம் புறக் கண்களுக்கு மறைந்தது போல் தோன்றினாலும், அவர்கள் நம் அகக்கண்களின் முன்பு எப்போதும்போல் இலங்கிக் கொண்டே இருக்கிறார்கள். ஆம் அவர் மறையவில்லை. நம் நெஞ்சமெல்லாம் நிறைந்திருக் கிறார்கள்!

## இதழ்களின் இரங்கல் :

### உங்களுடன் நான்....

'செந்தமிழில், நல்ல இலக்கியங்களைப் படிக்க வேண்டுமானால் எந்த நூலக வெளியீடுகளை வாங்கலாம்?'—இப்படி யாராவது கேட்டால், சந்தேகம் இல்லாமல் பளிச்சென்று சொல்லக் கூடிய பெயர் ஒன்று உண்டு. அதுதான் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்!

நல்ல தமிழ் அகராதி வேண்டுமா...? பொழிப்புரையுடன் கூடிய திருக்குறள் வெளியீடு தேவையா? தவறுகள் இல்லாத சங்ககால இலக்கியங்கள் தேவைப்படுகிறதா? இப்படியெல்லாம் கேட்டுக்கொண்டு வருபவர்களுக்காக, அந்தக் கழகம் அருமை யான நூல்களைத் தயாரித்து, வெளியிட்டிருக்கிறது.

இந்த நல்ல வெளியீட்டகத்தின் உயிர்நாடியாக விளங் கியவர் தமிழன்பர் திரு. வ. சுப்பையா பிள்ளை. இந்திய அரசு அவருக்குப் 'பத்மஸ்ரீ' பட்டம் அளித்துக் கௌரவித்திருக்கிறது. தமிழக அரசு 'செந்தமிழ்ச்செல்வர்' என்ற பட்டத்தைச் சூட்டிப் பாராட்டி இருக்கிறது.

அறுபது ஆண்டுகளாக அவர் செய்துவந்த தொண்டின் பயனாகக் கழகம் சுமார் 1,750 புத்தகங்களுக்குமேல் வெளியிட் டிருக்கிறது. தமிழ்மொழியின் அருஞ் செல்வங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றை சங்ககாலம் முதல் இன்றுவரை தொகுத்து வெளியிட்டுத் 'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்!' என்ற பாரதியாரின் கனவை நனவாக் கியவர் திரு. சுப்பையா பிள்ளை.

அந்தநாளில் நான் எனது தமிழ்ப் பணியைச் சென்னையில் ஒரு நூலகத்தில் தொடங்கியபோது என்னுடைய தமிழார் வத்தை வளர்த்தது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் புத்தகங்கள் தாம். பொறியியல் கலையின் படிப்பில் ஈடுபட்டிருந்த நான், தொழில் நுட்பப் புத்தகங்களைப் படிக்கத்தவறினாலும், கழக வெளியீட்டுப் புத்தகங்களைப் படிக்கத் தவற மாட்டேன்.

அறுபது ஆண்டுகளாக அரிய தொண்டு செய்துவந்த தமிழ்ப் பெரியாரின் ஈடு இணையற்ற சேவை, சென்ற வாரம் முடி வடைந்துவிட்டது. தமது எண்பத்தேழாவது வயதில் அவர் இயற்கை எய்தியிருக்கிறார். இன்றைய உலகரீதியில் பலருக்கும் இது பழுத்து முதிர்ந்து உதிர்வதற்கு உரிய பருவமாகக்கூடத் தோன்றலாம். ஆனால், தமிழ்த்தாயின் சேவைக்குப் பிள்ளை யவர்களைப் போன்ற இன்னொரு தொண்டர் கிடைப்பது அரிது! தன்னலமில்லாத அந்தச் சேவைக்கு வயது எல்லை ஏது?

மணியன்.

"இதயம் பேசுகிறது" 6-12-83.

## வ. சுப்பையா பிள்ளை

'தமிழில் என்ன இருக்கிறது' என்று கேட்பவர்கள் ஒரு முறை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கும் போய் வந்தால் என்ன இருக்கிறது என்பது புரியும்' என்றார் பேரறிஞர் அண்ணா.

உண்மைதானே, ஏதாவதொரு தமிழ்நூல், தமிழ் பற்றிய நூல் வேண்டும் என்றாலும், தமிழ்பற்றிய செய்தி வேண்டுமென்றாலும், தமிழ்ப்புலவர் உருவப்படம் வேண்டும் என்றாலும் 'கழகத்துக்கு எழுதவேண்டும்; கழகத்தில் கேட்டால் தெரியும்' என்று தமிழ் நாட்டில் மட்டுமல்ல உலகில் எங்கு தமிழர்கள் வாழ்கிறார்களோ அங்கெல்லாம் பேசப்படும் பேச்சாகும்.

இப்படிப் பெரும் புகழுக்குரிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைப் பேணி வளர்த்த பெருமைக்குரியவர், மறைந்த திரு. வ. சுப்பையா பிள்ளை.

பாளையங்கோட்டையில் 1897ல் பிறந்தவர் வ. சுப்பையா இவரின் அண்ணன் திருவரங்கர், தமிழ்க் கடல் மறைமலை அடிகளாரின் மருமகன் ஆவர்.

சைவசித்தாத்த நூற்பதிப்புக்கழகம் 1920 ல் சென்னைக் கிளை துவங்கப்பட்டது. சென்னையில் முகவராகப் பதவி ஏற்றார் வ. சுப்பையா பிள்ளை. அப்பொழுது இவர் பெற்ற ஊதியம் மாதம் ரூ35.

மறைமலையடிகளாரின் பெரும் புகழுக்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்கும் பெரும் பங்கு உண்டு. அதில் வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கு நிறைய பங்கு உண்டு.

தமிழில் கிடைக்காத நூல்களை எல்லாம் தேடிப் பிடித்து புலவர்களையும் தேடிக் கண்டறிந்து நாட்டுக்குக் காட்டியவர் சுப்பையா பிள்ளை, இது வரை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சுமார் 1800 நூல்களை வெளியிட்டுள்ளது.

எந்த நூலாக இருந்தாலும், நூலாசிரியர், பதிப்பாசிரியர், கழகப்புலவர்கள் மெய்ப்பு (புரூப்) பார்க்கப்பட்டிருந்தாலும், தாம் இறுதியாக மெய்ப்புப்பார்த்தால்தான் அச்சிட அனுமதி வழங்குவார் வ. சுப்பையா பிள்ளை, வெளியூர் சென்றாலும் பிழை திருத்தும் படிகளை எடுத்துச் செல்வார். அந்த அளவுக்குச் செய்யும் தொழிலில் கண்ணுங் கருத்துமாக இருத்தவர் வ. சு.

1973ல் நிகழ்ந்த அவருடைய பவளவிழாவின் போது, அவரை முதுபெரும் கிழவர் என்று சொன்னதைக் கூட சுப்பையா பிள்ளை ஏற்கவில்லை: 'கிழவர்' என்பதற்கு உரிமையாளர் பொருளில் அதைத்தாம் ஏற்பதாகவும் தாம் 'எழுபத்தைந்தாண்டு இளைஞர்' என்றும் சொல்லிக் கொண்டார்.

தி. மு. க. ஆட்சியின் பரிந்துரையின் மீது தாமரைத் திரு பட்டத்தை மத்திய அரசு இவருக்கு 1969-ல் வழங்கியது.

ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப் பட்டு வெளியாகிக் கொண்டிருக்கும் செந்தமிழ்ச் செல்வியும், சென்னை மறைமலையடிகள் நூல்நிலையமும் வ. சு. வின் புகழ் பரப்பிக் கொண்டிருக்கும்.

கடந்த 24.1.83ல் மறைந்த சுப்பையா பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளும், தமிழுக்கு அவர் ஆற்றியுள்ள தொண்டுகளும், நூல்களையும், மூலப்படிகளைத் தேடிப் பிடித்தலும், நூலாசிரியர் வரலாறுகளைக் கண்டறிதலும், ஆராய்ச்சிப் பட்டங்களுக்கு ஆயவு செய்வோர்குரிய செய்திகளாகும்.

தனித்தமிழ் வளர்த்த தமிழ்சால் நல்லறிஞர்.

'முத்தாரம்'
13-2-83

## தேடுதலும் பேணுதலும்

சிதைந்த நிலையிலிருக்கும் பழைய நூல்களும் இதழ்களும் ஒழிக்கப் பெற்றுள்ள செய்தி அறிவேன். டாக்டர் போப் துரைமகனார் தாம் மொழி பெயர்ப்பதற்குக் குறிப்பெழுதி வைத்திருந்த திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய தமிழ் மூலப்படிகள் மூன்றும், மேலுறையும் முகப்பும் இல்லாமல் சிதைந்த நிலையில் ஒழிப்பதற்கு எடுத்து வைக்கப் பெற்றிருந்த போது யான் சென்று கேட்டமையால் கிடைக்கப் பெற்றனவாகும். நூல்களைக் கட்டஞ் செய்தற்கென தொழிற்கூடமும், நூல்களை அச்சிடுதற்கென அச்சுக்கூடமும் கழகத்திலே இருக்கின்றமையால், எந்த நிலையில் நூல்களோ, மலர்களோ, இதழ்களோ கிடைக்கப்பெறினும், செம்மை செய்து அவை போற்றப் பெறுகின்றன. திரும்ப அச்சிட வேண்டிய பயனுள்ள பழைய நூல்களும், அச்சிட்டு வெளியிடப் பெறுகின்றன.

மறைந்த வ. சுப்பையா பிள்ளை,
"குங்குமம்" 13-2-83.

## கழக ஆட்சியர் வ. சு. அவர்கள் வரலாற்றில் இடம்பெற்றுள்ள காலக் குறிப்புகள் சில

| | |
|---|---|
| 22—9—1897 | வ. சு. அவர்கள் பிறப்பு. |
| 1900 | தந்தையார் வயிரமுத்துப் பிள்ளை இயற்கை எய்துதல். |
| 1907 | திருவரங்கர் ஈழத்திற்குச் செல்லுதல். |
| 1914 | மறைமலையடிகளார் கொழும்புக்கு முதன்முறை செல்லுதல். |
| 1916 | வ. சு. அவர்கள் பள்ளியிறுதித் தேர்வில் வெற்றி பெறுதல். |
| 1916 | வ. சு. அவர்கள் கொழும்புக்குச் செல்லுதல். |
| 1917 | மறைமலையடிகளார் மீண்டும் கொழும்புக்குச் செல்லுதலும் வ. சு சந்தித்தலும். |
| 1917 | கொழும்பில் 'திருசங்கர் கம்பெனி.' நிறுவுதல்'. |
| 1918 | வ. சு. மறைமலையடிகளாரைப் பல்லவபுரத்தில் சந்தித்தல். |
| 1918 | சென்னையில் திருசங்கர் கம்பெனி நிறுவுதல். |
| 21—9—1920 | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிவு. |
| பிப்ரவரி 1921 | சென்னைப் பவழக்காரத் தெருவில் கழகக் கிளை நிலையம் அமைதல். |
| 1922 | வ. சு. வை மலேரியாக் காய்ச்சல் தாக்குதல். |
| 1923 | செந்தமிழ்ச் செல்வி இதழ் தொடங்குதல். |
| 1924 | இரத்தாட்சி சைவப் பஞ்சாங்கம் தொடங்குதல். |
| 1925, 1926 | நெஞ்சில் ஈளைத்துயர். |
| 2—9—1927 | திருவரங்கர் நீலாம்பிகையார் திருமணம். |
| 1932 | திருக்குறள் நாட்காட்டி வெளியீட்டுத் தொடக்கம். |
| 18, 19—5—1935 | திருவள்ளுவர் திருநாட்கழகம் தோன்றுதலும் முதல் ஆண்டு விழாவும். |
| 7—7—1935 | வ. சு. மங்கையர்க்கரசியார் திருமணம். |
| 4—6—1936 | திருவள்ளுவர் திருநாட்கழக இரண்டாம் விழா. |
| 22—5—1937 | திருவள்ளுவர் கழக மூன்றும் விழா (பாகனேரி.) |
| 1927 | பலிவிலக்குச் சங்கம் தோற்றுவித்தலும், பலிவிலக்குப் போர் வெற்றியும். |
| 29—8—1937 | தமிழ்ப்பாதுகாப்புக் கழகம் தோற்றுவித்தல். |
| 1943 | தமிழறிஞர் கழகம் தோற்றுவித்தல். |
| 28—4—1944 | திருவரங்கர் பெரும் பிரிவு. |
| 5—11—1945 | நீலாம்பிகையார் பெரும் பிரிவு. |
| 4—10—1948 | அப்பர் அச்சகத் திறப்பு விழா. |
| 9—9—1950 | மறைமலையடிகள் இறுதி முறி எழுதுதல். |
| 15—9—1950 | மறைமலையடிகள் பெரும் பிரிவு. |
| 18—10—1950 | சிவஞானமுனிவர் நூல்நிலையம் திறப்பு விழா. |
| 27—4—1951 | நான்காவது தமிழ்மாநாட்டுக்காக யாழ்ப்பாணம் செல்லுதல். |
| 2—5—1951 | பெரியம்மை தாக்குதலால் யாழ்ப்பாணம் மருத்துவ மனை சேர்தல் (42 நாள்கள்) |

14—6—1951 யாழ்ப்பாணத்திலிருந்து நெல்லைக்குத் திரும்புதல்.
2—9—1952 அன்னை சுந்தரத்தம்மையார் இயற்கை எய்துதல்.
8—6—1953 பாளையங்கோட்டையில் இருந்து குடும்பத்தைச் சென்னைக்கு அழைத்து வருதல்.
11—6—1956 மூத்தமகளார் வடிவழகி திரு. இரா. கலியாண சுந்தரர் திருமணம்.
20—9—1957 ஆட்சியாளர் மணி விழா.
24—10—1957 மனோன்மணியம் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை விழா, சென்னை.
24—8—1958 மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழா, சென்னை.
24—6—1959 இளையமகளார் வயிரமணி திரு. இரா. முத்துக் குமாரசாமி திருமணம்.
20—8—1961 கழகத்தின் 1008 ஆம் நூல் வெளியீட்டு விழா.
12—7—1962 மறைமலையடிகள் கலைமன்றத் திறப்பு விழா, பல்லாவரம்.
11—2—1966 தென்னிந்திய தமிழ்ச் சங்கக் கட்டிடத் திறப்பு விழா, நெல்லை.
31—7—1967 கா. சு. பிள்ளை ஆராய்ச்சி மன்றத் துவக்க விழா, சென்னை.
14—9—1967 திருவரங்க நிலையத் திறப்புவிழா, நெல்லை.
14—11—1967 குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளித் துவக்க விழா, நெல்லை.
14, 15-10-1968 கழகச் சார்பில் திருவள்ளுவர் விழா, சென்னை.
26—1—1969 ஆட்சியாளர் தாமரைச்செல்வர் (பத்மஸ்ரீ) விருது பெறுதல்.
1—9—1969 தணிகைமணி செங்கல்வராய பிள்ளை 'டாக்டர்' பட்டம் பெறுவித்தல்.
18-20-12-1970 கழகப் பொன்விழா, சென்னை.
27—3—1972 வள்ளலார் திருவருள் மண்டபத் திறப்புவிழா.
4-5—8—1973 கழக ஆட்சியாளர் பவள விழா.
28—1—1977 மறைமலையடிகள் நூற்றாண்டு விழா.
29—1—1977 செந்தமிழ்ச் செல்வியின் பொன்விழா.
15—1—1979 ஆட்சியாளர் தமிழக அரசால் 'செந்தமிழ்ச்செல்வர்' என்னும் பட்டம் வழங்கப்பெறுதல்.
4—11—1979 மறைமலையடிகள் நூல்நிலைய 20 ஆம் ஆண்டு நிறைவு விழா.
9—1—1982 மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தால் 'பேரவைச் செம்மல்' பட்டம் பெறுதல்.
16, 17—1—1982 கழகத்தின் மணிவிழா
24—1—1983 இறையடி சேர்தல்.

———

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

## கழகப் புதிய வெளியீடுகள்

### கழக அமைச்சர் திருவரங்கர் வரலாறு

ஆசிரியர் : கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நிறுவனரும், மறைத்திரு மறைமலையடிகளாரின் மருகரும், கல்வித்துறையின் பெருமுயற்சியாளரும், சைவ சமயக் காவலரும், பதிப்புத்துறை ஆர்வலரும், கழக ஆட்சியர் தாமரைச் செல்வரின் தமையனரு மான உயர்திரு திருவரங்கனாரின் இவ் வரலாற்று நூல், கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா இளங்குமரன் அவர்களால் சீரியமுறையில் செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. டாக்டர் பா. நடராசன் அவர்களின் முன்னுரையுடனும், ஆட்சி மொழிக் காவலர் கீ இராமலிங்கனாரின் சீரிய ஆங்கில முன்னுரை யுடனும் கூடிய அழகிய பதிப்பு நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய இன்றியமையாத வரலாற்று நூல். 200 பக்கங்கள்.

விலை ரு 8 00

### வையை வளம்

ஆசிரியர் : கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்

இந்நூல் பாண்டி நாட்டின் வளத்திற்கும் வாழ்விற்கும் வகை செய்யும் வையை ஆற்றின் பாங்கினைப் பல்வேறு திருப்படங்களின் ஒன்று அகப்புறச் சான்றுகளுடன் ஆராய்ந்து எழுதப்பெற் றுள்ளது. வளமான செந்தமிழ் நடையில் அமைந்துள்ளது. படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்கள்தோறும் இடம்பெற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத்தக்க நூல்.

விலை ரு. 7 00

### வள்ளல் எழுவர் (நாட்டிய நாடகம்)

ஆசிரியர் : கலைமாமணி கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம்

கடைஎழுவள்ளல்களின் வரலாற்றைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் முறையில், அதே நேரத்தில் கண்ணுக்கும் கருத் துக்கும் விருந்தளிக்கும் நாட்டிய நாடகமாகவும் எழுதியுள்ளார் இந்நூலாசிரியர். கவிதைகள் இனிமையும் எளிமையும் கொண்டு படித்துச் சுவைக்கவும் நடித்துக் காணவும் ஏற்ற வகையில் அமைந்துள்ளன. பள்ளிகளிலும், கலைக் கழகங்களிலும் இருக்க வேண்டிய பயனுள்ள நாட்டிய நாடகம். விலை ரு 2 50

Studies in Tamil Literature and History
— V. R. Ramachandra Dikshitar, M A., Rs 40 00

## கழக நிலையங்களில் கிடைக்கும் பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| கண் மருத்துவம்—வே. இரா மாதவன் | 50 00 |
| முத்திநெறி—பேராசிரியர் டாக்டர் ந சுப்பு ரெட்டியார் | 28 |
| இன்றும நாளையும்—லக்ஷ்மி | 16 00 |
| காளியின் கண்கள்—லக்ஷ்மி | 14 00 |
| சமயக்கட்டுரை மாலை—டாக்டர் வெ. சு. அழகப்பன் | 8 00 |
| செம்மை தரும் சிந்தனைகள் —எஸ். இராஜு செட்டியார், பி.ஏ., பி.எல். | 7 00 |
| கல்கி சிவகாமியின் சபதம் (நாடகக் காப்பியம்) —கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் | 5 00 |
| சுப்பிரமணிய பாரதியின் கண்ணன் பாட்டு— காப்பிய நாடகம்—கூவும் குயில்—க. சி. கமலையா | 6 00 |



# Our Humble Homage to

# Padmashri V. SUBBIAH PILLAI

(Managing Director, South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., Madras)

The doyen of Tamil Books Publishers
Who has done Yeoman Service to
Tamil Language & Literature

---

**Asian Educational Services**
**New Delhi**-110016